புதிய புதிய நிறம்!




புதிய புதிய சுவை!

இலவச
ஜங்கிள் புக்
ஸ்டிக்கர் பெற
வேண்டுமானால்

நிகர அடக்கம் 25 கிராம்
* அதிகபட்ச சில்லறை விலை
அனைத்து வரிகள் உட்பட

புதிய




*ரூ. 1.25

பாப்பின்ஸின் 4 மேலுறைகளை
உங்கள் முகவரியுடன் இங்கு
அனுப்பவும் : பாப்பின்ஸ்
பாயிண்ட், பார்லே ப்ராடக்ட்ஸ்
லிமிடெட், த.பெ. எண். 907,
பம்பாய்-400 057

ஆகும் சக்தியை ராஜூ எவ்வாறு பெற்றான் என்பதைப் படியுங்கள்

# கேமல் சேம்ப்

அன்பார்ந்த நண்பர்களே,

இன்று பள்ளிக்கூடத்தில் ஒரு ஜோக் செய்தேன்.

கேமல் ஆயில் பேஸ்டல் உபயோகித்து ஒரு அழகான பட்டுப்பூச்சியைப்போல் வண்ணம் தீட்டி கரும்பலகையில் ஒட்டி வைத்தேன். பார்ப்பதற்கு இது மிக அழகாக இருந்தது.



வண்ண ஜாலத்துடன் இயறகையாக இருந்தது. ஒவ்வொருவரும் ஏமாந்து போனார்கள். அவர்கள் அதை நிஜமானப் பட்டுப்பூச்சி என்று நினைத்தார்கள். அது மட்டுமல்ல, இரண்டு பட்டுப்



பூச்சிகளும் அதைச் சுற்றி வட்டம் வந்தன, அதனுடன் சிநேகம் செய்து



கொள்ள. என்ன வேடிக்கை! நான் உண்மையில் ஒரு கேமல் சேம்ப். எவ்வாறெனில் உண்மையான பட்டுப்பூச்சிகளையும் நான் கேமல் ஆயில் பேஸ்டல் கொண்டு ஏமாற்ற முடியும்.

OIL PASTELS



உன் அன்புள்ள,

ராஜூ







## கேமல்

**வெற்றி வண்ணங்களை உபயோகியுங்கள். கேமல் சேம்ப்பாகத் திகழுங்கள்.**

கேம்லின் ஆர்ட்மெட்டீரியல் டிவிஷன், ஜே.பி. நகர், அந்தேரி (கிழக்கு), பம்பாய்-400 059.

# ஐ ஸக் இட்!





For Details Contact:
**SRI VENKATADRI ENTERPRISES**
Flat 14, 250, Lloyds Road, Madras-86. Ph: 8278807

**yankee doodle**
**ice cream**

TAS Vision ● 341




# அம்புலிமாமா

நிறுவனர் : 'சக்கரபாணி'    நிர்வாக ஆசிரியர் : நாகிரெட்டி



## கல்வி கற்கச் சுமை

இரண்டு மாத விடுமுறைக்குப் பின் பள்ளிகள் திறக்கப்பட்டு புதிய கல்வி ஆண்டு தொடங்கியுள்ளது. மாணவர்கள் புதிய வகுப்புகளுக்குப் போவதிலும் தம் நண்பர்களை மீண்டும் சந்திப்பதிலும் மகிழ்ச்சி அடைகிறார்கள்.

ஆனால் அவர்கள் தினமும் சுமந்து செல்ல வேண்டிய புத்தகங்களும் நோட்டுப் புத்தகங்களும் சேர்ந்து பெரும் பளுவை ஏற்படுத்துகிறதே. அதிகாரிகளும் கல்வித் துறை வல்லுநர்களும் சேர்ந்து மாணவர்களுக்கு 'அறிவை' அளிக்கத் திட்டம் வகுத்து இந்தச் சுமையைக் கொடுக்கிறார்கள்! ஒவ்வொரு பாடத்திற்கும் இரண்டு மூன்று புத்தகங்கள். பள்ளிக்கும் வீட்டிற்கும் பொதுத் தேர்விற்கும் என நோட்டுப் புத்தகங்கள்! புத்தகங்களும் ஆசிரியர்கள் அளிக்கும் விளக்கங்களை எழுதி வைக்க இவை மாணவர்கள் மீது சுமத்தப்படுகின்றன!

மாணவர்கள் இவற்றைக் கழுதை பொதி சுமப்பது போலச் சுமந்து செல்வது கண்டு சிலர் வேதனைப்பட்டனர். வேறு சிலர் இந்த அவல நிலை பற்றி நாடாளும் மன்றத்தில் பிரச்சினை எழுப்பினார்கள்.

இதனைப் பரிசீலிக்க அரசு ஒரு குழுவை அமைத்தது. யஷ்பால் குழு மாணவர்களின் இந்தச் 'சுமை'யைக் குறைக்க வேண்டும் என்றது. இதனை எல்லாக் கல்வி நிறுவனங்களும் இந்த ஆண்டு முதல் செயல்படுத்தலாமே!



மதிமுகம் : 94    ஜுன் 1994    புன்னகை : 6

தனிப்பிரதி : ரூ. 4.00    வருட சந்தா : ரூ. 48.00



# வென்றிடும் ப்ரைம்




அறிமுகமாகிறது ப்ரைம் ஜீனியஸ் மற்றும் ப்ரைம் மெரிட். உயர்ந்த தரம்வாய்ந்த காம்பாஸ் பாக்ஸ்கள்– விசேடமாக துல்லியமான- உன்னத கணிப்பிற்காக உருவாக்கப்பட்டது.

உங்கள் சின்னஞ்சிறுவர்களுக்கு ப்ரைம் அனுகூலத்தை வழங்குங்கள்.

PIDILITE

PRIME GENIUS PRIME MERIT

MATHEMATICAL DRAWING INSTRUMENTS

A PIDILITE PRODUCT

PID 8 94 TM

செய்திகளும் தகவல்களும்

# புதிய குடியரசு இத்தாலி

கடந்த நாற்பது ஆண்டுகளாக கூட்டாட்சி புரிந்த கிருஸ்துவ ஜனநாயகக் கட்சியையும் இடதுசாரிக் கட்சிகளையும் பதவிக்கு வர விடாமல் இத்தாலி மக்கள் செய்து வலது சாரியினர் ஆட்சி புரிய வாய்ப்பை அளித்துள்ளனர். கடந்த மார்ச் 27, 28 தேதிகளில் நடந்த தேர்தலில் வென்ற வலதுசாரிக் கட்சிகள் போர்ஜா இத்தாலியாக் கட்சித் தலைவர் சிலிவியா பெர்லுஸ்கோனி பிரதம மந்திரிப் பதவியை ஏற்க சம்மதித்துள்ளன. இதனால் இத்தாலி தன் ஆட்சியைப் பெடரல் முறையில் மாற்றும் என மக்கள் எதிர்பார்க்கிறார்கள். இரண்டாவது உலகப் போருக்குப் பின் அமையும் 53-வது அமைச்சரவையாகும் இது.



வலது சாரிக் கட்சிகளில் போர்ஜா இத்தாலியாவிற்கு 155 இடங்களும், ஜியா பிராங்கோபனியின் வடக் கூட்டுக் கட்சிக்கு 105 இடங்களும், அம்பர்டோ பெஸ்ஸியின் வட லீகிற்கு 100 இடங்களும் கிடைத்து அந்நாட்டு நாடாளுமன்றத்தில் கூட்டாக இவை 58 சத இடங்களைப் பெற்று பெரும்பான்மை அமைப்பாக ஆகிவிட்டன. நாடாளுமன்றத்தில் மொத்தம் 630 உறுப்பினர்கள் உள்ளனர். இடதுசாரிக் கட்சியினர் 34 சதவீத இடங்களையே பெற்றனர்.

ஆட்சிப் பொறுப்பேற்ற மூன்று கட்சிகளும் பெடரல் முறையில் ஆட்சி நடத்தத் தீர்மானித்துள்ளன. இதன்படி குடியரசுத் தலைவர் மக்களால் நேரடியாகத் தேர்ந்தெடுக்கப்படுவார். பிரதம மந்திரியை நாடாளுமன்றம் தேர்ந்தெடுக்கும்.

இத்தாலி மூன்று பக்கம் கடலால் சூழ்ந்து தீபகற்பமாக உள்ளது. மேலும் சார்டினியா, சிசிலி என்ற தீவுகளும் இந்நாட்டில் அடங்கியவை. கி.மு. 510 லிருந்து 27 வரை இந்நாட்டில் ரோமானிய குடியரசு இருந்ததாக வரலாறு கூறுகிறது. கி.மு. 27லிருந்து கி.பி. 47 வரை ஆண்ட ஜூலியஸ் சீஸர் ரோமன் சாம்ராஜ்யத்திற்கு அடிகோலினார்.

ரோமன் சாம்ராஜ்யம் அழிந்தபின் இத்தாலியைப் பலர் ஆக்கிரமித்தனர். 16–18-ம் நூற்றாண்டுகளில் இத்தாலியின் பெரும் பகுதி ஸ்பெயின் வசம் இருந்தது. அதற்குப் பின் ஆஸ்திரியர் வசமும் பிறகு பிரஞ்சுக்காரர் வசத்திலும் இருந்தது.

பிரஞ்சு சக்கரவர்த்தி நெப்போலியன் போனாபர்ட் 1815–ல் வார்லூ சண்டையில் தோற்றதும் இத்தாலி சுதந்திரம் அடைய முயன்று 1870–ல் வெற்றியும் பெற்றது.

முதலாவது உலகப் போருக்குப் (1914–18) பின் பெனிடோ முசலோனி பாசிசக் கொள்கையை முன் வைத்து மூன்றாண்டுகளுள் பதவிக்கு வந்தார் இந்நாட்டின் சர்வாதிகாரியாகி, ஜெர்மனியின் சர்வாதிகாரி ஹிட்லருடன் சேர்ந்து இரண்டாவது உலகப் போர் நடத்தினார். 1943–ல் பதவியிலிருந்து நீக்கப்பட்ட இவர் இத்தாலியிலிருந்து தப்பி ஓட முயன்றபோது கொல்லப்பட்டார்.

இத்தாலி 1946–ல் குடியரசாகியது. ஆயினும் நாடு சீர்குலைந்து ஸ்திரத் தன்மை என்பது இல்லாது தவித்தது. 45 ஆண்டுகளில் 52 மந்திரி சபைகள் அமைந்தது என்றால் பாருங்களேன்! இதில் சில அரசாங்கங்கள் சில நாட்களே ஆட்சி புரிந்தன! நாட்டில் ஆட்சி சரிவர இல்லாது இலஞ்சம், ஊழல்கள் என்பன சர்வ சாதாரணமாகி விட்டன. ஆட்சி புரிந்த பல தலைவர்கள் மக்களின் வெறுப்புக்கே ஆளாயினர்.

இந்நிலையில்தான் மக்கள் அண்மையில் நடந்த தேர்தலில் இடது சாரிக் கூட்டு ஆட்சியை விலக்கி வலது சாரிக் கட்சி களுக்கு வாக்களித்து ஆட்சியில் அமர்த்தியுள் ளார்கள். இதில் முக்கிய கட்சியான போர்ஜா இத்தாலியா அமைக்கப் பட்ட மூன்று மாதங்களுக் குள்ளாகவே மக்களின் நம்பிக்கையைப் பெற்று விட்டது. அதன் தலைவர் 57 வயதான பெர்லுஸ் கோனி மிகப்பெரிய டி.வி. அமைப்பின் அதி பர். ஐரோப்பாவிலேயே இது மிகப்பெரிய ஒளி பரப்பு நிறுவனம். இன்று உலகில் மிகப் பெரிய பணக் காரர்களில் இவர் ஒருவராவார். அத னால் இவரை 'இந்நாள் சீஸர்' என்று மக்கள் குறிப்பிடுவதில் ஆச் சரியமே இல்லைதான்!





# அனுபவபூர்வக் கல்வி

நிலக்கோட்டையில் நீலகண்டன் என்பவருக்கு மூன்று மகன்கள் இருந்தனர். முதல் இரு புதல்வர்கள் விவசாயமும் வியாபாரமும் செய்து வந்தனர். ஆனால் மூன்றாவது மகன் முத்து எந்த வேலையும் செய்யாமல் இருந்தது அவனது தந்தைக்கு மிகுந்த கவலையை அளித்தது.

முத்து எல்லோருக்கும் உதவி மனம் குளிரப் பேசி ஊராரின் மனத்தைக் கவர்ந்து விட்டான். கல்யாணம், திருவிழா என்றால் அவன் முதலில் போய் நிற்பான். நன்கொடை வசூலிப்பதில் கெட்டிக்காரன். பிறர் கஷ்டப்பட்டால் காணச் சகியாமல் ஆறுதல் கூறுவான்.

முத்துவுக்குத் தன் பெண்ணைக் கொடுப்பதாக அதே ஊரிலுள்ள நீலகண்டனின் ஒரு உறவினர் முன் வந்தார். ஆனால் நீலகண்டனோ "என் மகன் ஏதாவது ஒரு தொழிலிலோ உத்தியோகத்திலோ நிலைத்து இருந்தாலே அவனது திருமணத்தைப் பற்றி யோசிப்பேன்" என்று கூறி விட்டார்.

நீலகண்டன் தன் மகனுக்கு அந்நிலையில் கல்யாணம் செய்து வைத்தால் நிலைமை மேலும் மோசமாகும் என்றே நினைத்தார். முத்துவின் மனம் மாறி அவன் ஏதாவது ஒரு தொழிலை மேற்கொண்டு நிலைத்து அதனை செய்தாலே அவன் வாழ்வில் முன்னேற முடியும் என நினைத்தார். அதனால் தான் நல்ல சம்மந்தம் வந்தும் அவர் 'வேண்டாம்' என்று கூறினார்.

அப்போது அந்த உறவினர் "உங்கள் மகனை நீங்கள் வேதவனத்திலுள்ள விமலானந்தரின் குருகுலத்திற்கு அனுப்புங்கள். அங்கு கல்வி கற்ற பின் சிறந்து விளங்குவான்" என்றார்.

- பாபநாசம் சாமா -



நீலகண்டன் விமாலனந்தரின் குரு குலம் பற்றி கேள்விப்பட்டிருந்தார். அங்கு கல்வி கற்றவர்களுக்கு அரசாங்கத்தில் உயர் பதவிகள் கிடைக்கின்றன என்றும் ஆனால் கல்வி எப்போது முடியும் என்பதையும் அதற்கு எவ்வளவு பணம் கொடுத்து வரவேண்டும் என்பதனையும் விமலானந்தர்தான் தீர்மானிப்பார் என்பதையும் அவர் விசாரித்துத் தெரிந்து கொண்டார்.

நீலகண்டன் முத்துவை அழைத்துக் கொண்டு விமலானந்தரின் குருகுலத்தை அடைந்தார். விமலானந்தரும் "நான் முதலில் ஒரு பரீட்சை வைத்து அதில் தேறுபவனைத்தான் என் சீடனாக ஏற்பேன். அதற்குப் பிறகே அவனுக்கு இலவசமாக கல்வி அளிப்பதா அல்லது எவ்வளவு பணம் வாங்குவது என்பது பற்றிக் கூறுவேன்" என்றார். நீலகண்டனும் "மகனைப் பரீட்சித்து தங்கள் மாணாக்கனாக ஏற்றுக் கொள்ளுங்கள். நான் நீங்கள் குறிப்பிடும் தொகையைக் கொடுக்கத் தயார்" என்றார்.

விமலானந்தரும் முத்துவைப் பரீட்சித்து விட்டு நீலகண்டனிடம் "உங்கள் மகனுக்கு ஓரளவு உலக ஞானம் இருக்கிறது. நான் வைத்த பரீட்சையில் தேறியும் இருக்கிறான். ஆனால் அவனுக்காக நீங்கள் ஆண்டுக்கு இரண்டாயிரம் வராகன்கள் கொடுக்க வேண்டும் இவனது படிப்பு எப்போது முடியும் என்பதை இப்போது சொல்ல முடியாது. நான் இவன் என்னிடம் படித்தது போதும் என நினைத்தால் மறுவிநாடியே இவனை இங்கிருந்து அனுப்பி விடுகிறேன்" என்றார்.

நீலகண்டனும் இரண்டாயிரம் வராகன்களை விமலானந்தரிடம் செலுத்தி முத்துவை அவரது குருகுலத்தில் சேர்த்து விட்டுத் திரும்பினார். முத்து வேண்டா வெறுப்பாகத்தான் அந்த குருகுலத்தில் அடி எடுத்து வைத்தான்.

விமலானந்தரும் "முத்து உனக்கு நல்ல அறிவு இருக்கிறது. நீ இங்கு நான் சொல்லிக் கொடுப்பதைக் கவனமாகக் கற்று வா. நீ வாழ்க்கையில் முன்னேற்றம் அடையும் வாய்ப்

பும் கிட்டும். உன் தந்தை படும் சிர மத்திற்குத் தக்க பலனும் கிடைக்கும்" என்றார்.

முத்துவும் அந்த குருகுலத்தைச் சுற்றிப் பார்த்தான். அங்கு பல மாணவர்கள் இருந்தனர். அவர்களில் சிலர் இலவசக் கல்வி பெறுபவர்கள். மற்றவர்கள் செலுத்தும் கட்டணமோ ஆளுக்கு ஆள் வித்தியாசப்பட்டிருந் தது. சிலர் ஆண்டுக்கு ஆயிரம் வரா கன்களாகவும், சிலர் இரண்டாயிரம் வராகன்களாயும் வேறு சிலர் இதற் குச் சற்று அதிகமாகவோ குறைவா கவோ கட்டணம் செலுத்தி வந்தனர்.

இதையெல்லாம் அறிந்த முத்து "சரி, என் குரு ஏதோ ஒரு காரணத் திற்காகத்தான் இந்த ஏற்பாட்டைச் செய்திருக்க வேண்டும். இங்கு நான் வந்தது கல்வி கற்க. ஆனால் புதுப் புது அனுபவங்கள் எனக்குக் கிட்டு கின்றன. எனவே நான் ஆசிரியர் கூறுவதையும் நன்கு கேட்டுக் கொள் கிறேன்" என நினைத்து படிப்பில் மிகவும் கவனம் செலுத்தினான்

அந்த மாணாக்கர்களில் முத்து வுக்கு மோகனன் என்பவன் நண்ப னானான். அவன் முத்துவின் அறி வுத் திறன் கண்டு வியந்து "உனக்கு என்னவெல்லாமோ தெரிந்திருக் கிறதே. இதை நீ நம் குரு சொல்லியா தெரிந்து கொண்டாய்? நீ அவரது அன்பிற்குப் பாத்திரமாகி தலைமை சீடனாகவும் ஆகி விட்டாயே" என்றான்.



அப்போது முத்து "இதெல்லாம் நம் குரு கற்றுக் கொடுக்கவில்லை. என் அனுபவத்தால் நானே அறிந்து கொண்டவை" என்றான். ஆனால் மோகனன் இதை நம்பவில்லை.

மோகனனின் தந்தை குருகுலத் திற்கு ஆண்டு ஒன்றுக்கு ஐநூறு வராகன்கள் வீதம் கட்டணம் செலுத்தி வந்தார். தன் தந்தை முத்துவின் தந்தையைவிடக் குறைவாகப் பணம் கொடுத்ததால் குரு தனக்கு சரியாகக் கல்வி கற்பிக்கவில்லை என்ற எண் ணம் மோகனனின் மனதில் பதிந்து விட்டது.

மோகனன் நினைப்பது போல இன்னும் சில மாணவர்களும் நினைக் கிறார்கள் என்பது முத்துவுக்கு தெரிந்



தது. இலவசமாகக் கல்வி பயில்பவர்களோ குரு முற்றிலும் தங்களை கவனிப்பதே இல்லை என்று நினைப்பதையும் முத்து அறிந்தான்.

முத்துவும் விமலானந்தர் சொல்லிக் கொடுக்கும் பாடங்களைப் பற்றிச் சற்று யோசித்துப் பார்த்தான். அவர் தம் ஆசனத்தில் அமர்ந்தபடியே மலைகளின் மீது ஏறும் விதத்தையும், மல்யுத்தம் செய்யும் முறைகளையும், நீரில் நீந்தும் விதத்தையும், விவரமாகக் கூறினாரேயொழிய மலைக்கோ, மைதானத்திற்கோ, நீர் நிலைக்கோ யாரையும் அழைத்துச் செல்லவில்லை. ஆசிரமத்திற்கு வெளியே சென்றால் தம் கால்கள் வலிக்கும் என்று வேறு அவர் கூறி வந்தார்.

மற்போர் செய்து காட்டினால் தம் உடல் வலிக்கும் என்றும் அவர் கூறி வந்தார். இது போலத் தனக்கு நீரில் கண்டம் இருக்கும் என்பதால் அவர் எந்த நீர் நிலைக்கும் போவதும் இல்லை. சீடர்கள் நீர் இறைத்து கொண்டு வந்து கொடுக்க அவர் குளித்தும் வந்தார்.

முத்து இதை எல்லாம் கண்டு "என் குரு கற்பிக்கும் முறை சரி இல்லை. எல்லாம் புத்தகப் படிப்போடுதான் இருக்கிறது. செயல் முறையில் இல்லையே. படிப்பதை ஆசிரியர் செய்து காட்டினால்தானே மாணவன் அது பற்றி முழுவதுமாக அறிந்து கொள்ள முடியும். எனவே இவரது முறை சரி இல்லை" என எண்ணினான்.

இப்படிப்பட்ட குரு தனக்கு என்ன கற்பித்து விடப் போகிறார் என்று முத்து அவ்வப்போது எண்ணிப் பார்த்ததும் உண்டு. இந்த சமயத்தில் அவர் சமையல் பாடங்களை கற்பிக்கலானார். எல்லாம் வாய்ச் சொற்களால்தான். அடுப்போ, பாத்திரங்களோ, பண்டங்களோ எவையும் செய்முறை என்று பயன்படுத்தப்படவில்லை. அவர் சொல்வதைக் கேட்ட மாணவர்கள் அவற்றின் ருசி எப்படி இருக்கும் என எண்ணி நாக்கை சப்பு கொட்டினார்கள். ஆனால் யாவரும் குருகுலத்தில் சாப்பிடுவது காய், கனி, கிழங்குகளே. வேறு

எந்த உணவும் சமைக்கப்படவில்லை.

முத்து அங்கு வந்து ஓராண்டு முடிந்தது. மறுவருட ஆரம்பத்தில் பழைய பாடமே கற்பிக்கப்பட்டது. அப்போது தலைநகரிலிருந்து அச்சுதன் என்பவன் விமலானந்தரை உடனே தலைநகருக்கு வரும்படி வேண்டி தகவல் அனுப்பினான்.

அச்சுதன் விமலானந்தரின் சீடன். அவன் ஓராண்டு காலம் விமலானந்தரின் குருகுலத்தில் கல்வி பயின்று விட்டு அரசாங்கத்தில் உயர் பதவி பெற்றவன் அவனிடமிருந்து அழைப்பு வந்தது.

அந்த அழைப்பில் அச்சுதன் "ஐயா, என் திறமையைப் பாராட்டி மன்னர் என்னைப் பொதுக் கூட்டத்தில் கௌரவிக்கப்போகிறார். அது சமயம் தாங்களும் வந்து கூட்டத்தில் கலந்து கொண்டால் எனக்குப் பெருமையாக இருக்கும்" என்று எழுதி இருந்தான். அதைப் படித்து விட்டு விமலானந்தர் தம் சீடர்களோடு தலைநகருக்குச் சென்றார்.

அங்கு மாபெரும் கூட்டத்தில் மன்னன் அச்சுதனைப் பாராட்டி பணமுடிப்பும் பரிசுகளும் அளித்தான். அவனைப் பல கவிஞர்கள் தம் கவிதைகளால் பாராட்டினார்கள். அச்சுதனோ தன் குருவை மேடைக்கு வரவழைத்துத் தான் பெற்ற பரிசுகளை எல்லாம் அவரது காலடியில் வைத்து வணங்கினான். விமலானந்தரும் "என் சீடனை இந்நிலையில் கண்டு பெருமிதம் கொள்கிறேன்" என யாவரும் கேட்கக் கூறினார்.



அப்போது முத்துவும் மற்ற சீடர்களும் தம் குருவையே பார்த்தார்கள். மோகனன் முத்துவிடம் "இவர் எல்லாச் சீடர்களிடமும் அவர்களைப் பார்த்துப் பெருமைப்படுவதாகக் கூறியே வருகிறார். இந்த அச்சுதன் ஒரே வருஷத்தில் படித்து விட்டு குருகுலத்தை விட்டுச் சென்றான். நானோ ஆறு வருடங்களாகக் கல்வி கற்று வருகிறேன். இன்னமும் என் படிப்பு முடிந்தது என்று குருநாதர் சொல்லவில்லை" என்றான்.

அதுகேட்டு முத்துவுக்குத் திகில் பிடித்தது. அன்றிரவு அவன் சரியாகத் தூங்கவில்லை. மறுநாள் மன்னன் விமலானந்தரும் அவரது சீடர்களும் தங்கி இருந்த விடுதிக்கு வந்தான். அவன் விமலானந்தரிடம் "எனக்கு உடனடியாக என் பொக்கிஷ அதிகாரிக்கு உதவியாக பணிபுரிய திறமையான ஒருவர் தேவைப்படுகிறார். தாங்கள் தங்களது சீடர்களில் ஒருவரைத் தேர்ந்தெடுத்துக் கொடுக்க முடியுமா?" என்று கேட்டான்.

விமலானந்தர் தன் சீடர்களை நோக்கவே சட்டென முத்து முன் வந்து "குருவே! என் படிப்பு முடிந்து விட்டது என்றே நினைக்கிறேன். தாங்கள் அனுமதித்தால் இப்பதவியை நான் ஏற்கிறேன்" என்றான்.

விமலானந்தரும் முத்துவை ஆசீர்வதித்து "நீயும் உன் திறமையால் உயர் பதவி பெற்று விரைவில் கௌரவிக்கப்படுவாய். இதுநாள் வரை நீ கற்றது உனக்கு உறு துணையாக இருக்கும். சொல்லிக் கொடுத் ததைச் செயலாக்குபவனே நல்ல மாணவன்" என்று கூறினார்.

அப்போது தான் முத்துவுக்குத் தன் குருவின் முறை சரியானது எனப் புரிந்தது. மாணவன் தான் கற்றதைச் செயல் முறையில் கொண்டு வரமுடியும் என உறுதியாக நம்பினால் அவனது கல்வி முடிந்தது எனத் தன் குரு முடிவு செய்வதை உணர்ந்தான்.





# கீர்த்திசிம்மன் கதை

வெகு காலத்திற்கு முன் கோசல நாட்டை சுசேனன் என்ற மன்னன் ஆண்டு வந்தான். அவனது உயிருக்கு உயிரான நண்பன் ஜெயசேனன், அவன் நண்பன் மட்டுமல்ல, அவ்வப்போது யோசனைகள் கூறும் அந்தரங்க ஆலோசகனாகவும் இருந்தான். மன்னனுக்குச் சதுரங்கம் விளையாடுவதில் மிகவும் விருப்பம். அதனால் ஜெயசிம்மன் அவனோடு பொழுதுபோக்க சதுரங்கம் ஆடியும் வந்தான்.

ஒருமுறை சதுரங்க ஆட்டத்தில் ஜெயசேனன் மன்னனை வென்று விட்டான். அவன் சிரித்தவாறே" உலகம்தான் எப்படிப்பட்டது! நான் உங்களைத் தோற்கடித்து அடையும் மகிழ்ச்சியைவிட என் மகளிடம் சதுரங்கத்தில் தோற்கும் போது அதிக ஆனந்தமே ஏற்படுகிறது" என்றான்.

ஜெயசேனனின் ஒரே மகள் சக்திசேனை மிகவும் அழகானவள். நற்குணவதி. நல்ல அறிவாளி. இதையெல்லாம் மன்னன் அறிந்திருந்தும் அறியாதவன் போல "உன் மகள் சதுரங்க ஆட்டத்தில் அவ்வளவு கெட்டிக்காரியா?" என்று ஆச்சரியப்படுபவன் போலக் கேட்டான். ஜெயசேனனும் "வேண்டுமானால் நீங்களே பரீட்சித்துப் பாருங்கள்" என்று பெருமை பொங்கக் கூறினான்.

மன்னனும் சற்று நேரம் யோசித்தான். அதைக் கண்ட ஜெயசேனன்



"நான் கூறுவதில் தங்களுக்கு நம்பிக்கை ஏற்படவில்லை போலும். நான் என் மகளை ஒரு ஆண் பிள்ளையை வளர்த்திருப்பது போல வளர்த்திருக்கிறேன். கல்வி கேள்விகளில் சிறந்து விளங்குகிறாள். நீங்கள் மட்டும் ஒருமுறை அவளோடு பேசிப் பார்த்தால் நான் கூறுவது முற்றிலும் உண்மை என்பது உங்களுக்கே தெரிந்து விடும்" என்றான்.

மன்னனும் "சரி, நாளை இரவே உன் வீட்டிற்கு வருகிறேன். உன் மகள் விளையாடும் விதம் எப்படிப் பட்டது என்று பார்க்கிறேன்" என்றான். அதன்படியே மறுநாள் இரவு ஜெயசேனனின் வீட்டிற்குப் போய் சக்திசேனையுடன் சதுரங்கம் விளையாடினான். மிகவிரைவில் காய்களை நகர்த்தி சக்திசேனை எளிதில் மன்னனைத் தோற்கடித்து விட்டாள். அது கண்டு மன்னன் அவளது அறிவை மனத்துள் பாராட்டிய வாறே அவளது அழகைக் கண்டு வியந்தான்.

பிறகு அவன் ஜெயசேனன் அளித்த உணவை அருந்திவிட்டு "நீ சக்தி சேனையை மகளாக அடைந்த தற்கு வாழ்த்துகிறேன். அவள் மட்டும் ஆணாகப் பிறந்திருந்தால் மேலும் சிறப்பாக இருந்திருக்கும்" என்றான். அதுகேட்டு ஜெயசேனன் "என் மகள் போர்க்கலையிலும் எந்த ஆணுக்கும் சளைத்தவள் அல்ல. ஒரு பெண்ணாக இருந்து எந்த ஆணையும்விட வீரத்தைக் காட்டும் என் மகளைக் கண்டு பூரித்துப் போகிறேன்" என்றான்.

அதுகேட்டு மன்னன் சற்று ஆவேசத்துடன் "அப்படியானால் உன் மகள் என் மகன் கீர்த்திசிம்மனை விட உயர்ந்தவள் என்றா சொல்கிறாய்?" என்று கேட்டான். அத்தகைய கேள்வியை எதிர்பாராத ஜெயசேனன் திடுக்கிட்டு ஏதோ சொல்ல முயல மன்னன் குறுக்கிட்டு "நீ ஒன்றும் பயப்படாதே. நான் உன் மகளுக்கு ஒரு பரீட்சை வைக்கப் போகிறேன். அவள் அதில் வெற்றி பெற்றால் அவளையே என் மருமகளாக்கிக் கொள்கிறேன். தோற்றால் என் மகளாக எண்ணி நல்ல இடமாகப்

பார்த்து மணம் செய்து வைக்கிறேன்" என்றான். ஜெயசேனனும் அதற்கு இணங்கினான்.

மன்னனும் "என் மகன் கீர்த்தி சிம்மன் நம் நாட்டு வட திசையிலுள்ள அரவல்லி மலைச்சாரலில் அமைந் துள்ள கிருஷ்ண சந்திரரின் குருகுலத் தில் படித்துக் கொண்டிருக்கிறான். வரும் பௌர்ணமியன்று அவனது படிப்பு அங்கு முடியப் போகிறது. மறுநாளே அவன் தனியாகக் கிளம் பித் தலைநகருக்கு வரப்போகிறான். உன் மகள் வழியில் அவனை மடக்கி கிழக்கு புறமாக உள்ள காட்டிற்கு அனுப்ப வேண்டும். அங்கு மிகப் பழைய சக்தி தேவியின் ஆலயம் உள்ளது. அதில் கீர்த்தி சிம்மனை அவள் மூன்று நாட்கள் சிறைப்படுத்தி வைக்க வேண்டும். இதை உன் மகளே வேறு யாருடைய உதவியும் இல்லாமல் செய்ய வேண்டும். இதை அவளால் செய்ய முடிந்தால் அவளைக் கீர்த்திசிம் மனுக்குக் கல்யாணம் செய்து வைக் கிறேன். கீர்த்திசிம்மன் அந்த மூன்று நாட்களில் எங்கும் செல்லக்கூடாது. இதை அவள் நினைவில் வைத்துக் கொள்ள வேண்டும்" என்றான்.

இதைக் கேட்ட ஜெயசேனன் திகைத்து நிற்கவே மன்னன் அவனைத் தட்டிக் கொடுத்து "சரி. உன் மகளை முதலில் இங்கே கூப் பிடு" என்றான். ஜெயசேனனும் சக்தி சேனையை அழைத்து வரவே, மன் னன் அவனிடம் எல்லாவற்றையும் விவரமாகக் கூறி "பெண்ணே! உன் தகப்பனார் தன் மகள் என்று பெரு மைப்பட்டு ஏதேதோ சொன்னார். நான் சொன்னபடி நீ செய்வாயோ?" என்று கேட்டான்.



மன்னன் என்ன சொல்லப் போகி றானோ என்று ஜெயசேனன் திகைத்து யோசிக்கலானான். தன் மகளைப் பற்றி அவனிடம் பெருமை யாகக் கூறியதுதான் செய்த தவறோ என்று கூட அவன் எண்ணினான். ஆனால் இப்போது என்ன செய்ய முடியும்? இனிமேல் என்ன என்பது தானே பிரச்னை. தன் மகள் மன்ன னுக்கு என்ன பதில் சொல்லப் போகிறாள் என்றே அவன் எதிர்



மனைப் பற்றி நன்கு அறிவேன். அவன் கிருஷ்ண சந்திரனின் சீடர்களில் முதலாவதாக இருப்பவன். அரசியல், பொது அறிவு, போர்க் கலை, ஆகியவற்றில் அவனுக்கு நிகர் யாருமே இல்லை. அவனைச் சிறைப்படுத்துவது எளிதல்ல. நீ தனியாகப் போய் எப்படித்தான் இதைச் செய்து முடிக்கப் போகிறாயோ?" என்று கூறிப் பெருமூச்சு விட்டான்.

சக்திசேனையோ "ஏன்தான் அரசர் இந்தப் பரீட்சை எனக்கு வைக்கிறாரோ?" என்றாள். ஜெயசேனனோ "இது என் வாய்க் கொழுப்பால் வந்த வினை. உன்னைப் பற்றிப் பெருமையாகச் சொன்னேன். அது மன்னனுக்கு ஒரு சவால் விட்டது போலாகி விட்டது" என்றான். அவளும் "அதிகக் கர்வம் கொண்டால் ஒரு மனிதனின் நிலை என்னாகும் என்பது உங்களைப் பார்த்தால் தெரிந்துவிடும். படிப்பில் போட்டி போடுவது நல்லதே. அது போலத் தந்தை தன் மகளைப் பற்றிப் பெருமை கொள்வதில் தவறும் இல்லை. ஆனால் அளவு மீறிவிடக் கூடாது. எனக்கென்னவோ அரசர் இந்தப் பரீட்சை வைத்ததற்கு வேறு ஏதோ உள் நோக்கம் உள்ளது என்றே படுகிறது" என்றாள்.

ஜெயசேனனோ "நீ அரசரின் பரீட்சைக்கு உட்படுவதாகக் கூறி என் மானத்தைக் காத்தாய். நாம்

பார்த்து நின்றான்.

சக்திசேனையும் "ஆஹா! நீங்கள் சொன்னபடியே செய்து காட்டுகிறேன்" என்றாள். ஜெயசேனன் தன் மகள் கூறியது கேட்டு மலைத்துப் போனான். மன்னனோ புன்னகை புரிந்து மெதுவாக ஆறுதல் கூறுவது போல அவளைத் தட்டிவிட்டுத் தன் அரண்மனைக்குச் சென்றான்.

மன்னன் சென்றதும் சக்திசேனை தன் தந்தையினருகே வந்து "அப்பா! நீங்கள் ஏன் இப்படி பயப்படுகிறீர்கள்? நான் பார்த்துக் கொள்கிறேன்" என்றாள். ஜெயசேனனும் "சரி, நீ சொல்லிவிட்டாய். அதன்படி நடந்து தானே ஆகவேண்டும். கீர்த்திசிம்

நினைப்பது போல இது ஒரு சவால் என்றால் நீ இன்னும் சில விஷயங் களைத் தெரிந்து கொண்டாக வேண் டும். நான் சொல்லப் போவதை கவனமாகக் கேள்" என்று கூறிச் சொல்லத் தொடங்கினான்.

நானும் சுசேன மன்னனும் நண் பர்களாக இருப்பது போல நம் முன்னோர்களும் இருந்திருக்கிறார் கள். கோசல மன்னர்களுக்கு நம் குடும்பத்தவர் நண்பர்களாகவும் அந்தரங்க ஆலோசகர்களாகவும் இருந்திருக்கிறார்கள். இது எங்கள் தாத்தாவின் முப்பாட்டனார் காலத்தி லேயே ஆரம்பமாகியது. அவர் பெயரும் என் பெயரே. அவர் பல கலைகளில் கை தேர்ந்தவர். மந்திர மாயவித்தைகள் நன்கு அறிந்தவர். அக்காலத்திலே இந்த வித்தை யில் அவருக்கு இணை யாருமே இல்லை!

அப்போது மன்னராக இருந்த விசித்திர வர்மருக்கு மாயம், மந்திரம் என்றால் மிகவும் பிடிக்கும். அத னால் ஜெயசேனரோடு வலிய நட் புறவு கொண்டார். அவரையே தன் அந்தரங்க ஆலோசகராகவும் ஏற்றுக் கொண்டார். மன்னரும் எல்லா சாஸ்திரங்களையும் கற்றவர். அத னால் ஜெயசேனருக்கு அந்த நட் புறவு பெரும் மகிழ்ச்சியையே அளித்தது. சில மாதங்களிலேயே அவர்கள் ஆருயிர் நண்பர்களாகி விட்டனர்.

ஜெயசேனரின் மந்திர சக்தியால் மன்னரும் அவரும் யார் கண்ணிலும்





படாமல் நாடு முழுவதும் சுற்றி மக்களின் குறை நிறைகளைத் தெரிந்து வந்தனர். திருடர்களும் போக்கிரிகளும் விரைவில் கண்டு பிடிக்கப்பட்டு தண்டிக்கப்பட்டார்கள். மக்கள் சுகவாழ்வு வாழ்ந்தனர்.

இப்படி இருக்கையில் ஒரு முறை மன்னரின் பிறந்த நாளின் போது ஜெயசேனர் ஒரு முத்து மாலையைப் பரிசாக அளித்தார். அது மந்திர சக்தி வாய்ந்த மாலை. முத்துகளே நிறைய இருந்தும் நவரத்தினங்களும் அதில் இருந்தன. ஜெயசேனர் அதில் மூன்று வித மந்திர சக்திகளைச் செலுத்தினார். அந்த மாலையை அணிந்தவர் நினைத்த மாத்திரத்தில் மாயமாய் மறைந்து போய்விட முடியும். அவர் தன்னெதிரே நின்று பேசுபவர் சொல்வது பொய்யா மெய்யா என்பதை அம்மாலையின் மற்றொரு சக்தியால் அறிந்து கொண்டு விடுவார். மூன்றாவது சக்தியால் அம்மாலையை அணிந்தவர் பூமிக்கு அடியிலுள்ள புதையலையும் தங்கத்தையும் காண முடியும்.

ஜெயசேனர் இப்படி ஒரு அற்புத மாலையைத் தனக்குப் பரிசளித்தது கண்டு மன்னர் மிகவும் மகிழ்ந்து போனார். அவர் ஜெயசேனரைப் பார்த்து "இது மிக அரிய முத்து மாலை. இதை எனக்குக் கொடுத்தது நீங்கள் நாட்டின் நலனைக் கருதியே. இதனை நான் பத்திரமாகப் பாது காத்து வைத்திருக்கவும் வேண்டும்" என்றார். ஒருமுறை அவர் அந்த மாலையை அணிந்து கொண்டு கோசலத்தின் கிழக்குப் பகுதியிலுள்ள காட்டிற்கு வேட்டையாடத் தன் பரிவாரங்களுடன் சென்றார். உடல்நலமில்லாது போனதால் ஜெயசேனர் மன்னர் விசித்திர வர்மருடன் செல்லவில்லை. தலைநகரிலேயே இருந்து விட்டார்.

பகல் முழுவதும் வேட்டையாடிய பின் கூடாரங்களை அமைத்து இரவில் மன்னரும் அவருடைய பரிவாரங்களும் அவற்றில் தங்கினர். காவல் காப்பவர்களைத் தவிர மற்றவர்கள் எல்லோரும் அயர்ந்து தூங்கி விட்டனர். ஆனால் மன்னருக்கு

மட்டும் தூக்கம் வரவில்லை. அவர் மனதில் ஏற்பட்ட உணர்ச்சியே அதற்குக் காரணம்.

அவர் தம் கூடாரத்தை விட்டு வெளியே வந்து உலாவலானார். அவர் கால் போன போக்கில் போகவே காவல் வீரர்களும் அவரைப் பின் தொடர்ந்து சென்றனர். மன்னர் ஓரிடத்தில் நின்று தன் பின்னால் வந்த வீரர்களிடம் "இந்த இடத்தைத் தோண்டுங்கள்!" என்று கட்டளை இட்டார்.

கொஞ்ச நேரத்திற்குப்பின் அந்தப் பகுதி பட்டப்பகலைப் போல ஒரே வெளிச்சமாக இருந்தது. காரணம் வீரர்கள் பிடித்துக் கொண்டிருந்த தீவட்டிகளே. இரவு முழுவதும் வெட்டிப் பிறகு மறுநாள் உச்சி வேளை வரை வீரர்கள் குழி தோண்டிக் கொண்டே இருந்தார்கள்.

உச்சி வேளைக்கு ஒரு கருங்கல் விக்கிரகம் கிடைத்தது. அதன் மூக்கில் வைர மூக்குத்தி ஒளி விட்டது. மன்னர் அந்த விக்கிரகத்தைக் கண்டு அதை உடனே தலைநகருக்குக் கொண்டு செல்லும்படிக் கட்டளை இட்டார். ஆனால் அப்போது அவருடன் இருந்த அமைச்சர் பிரகலாதர் அப்படிச் செய்யக்கூடாது என்றும் சாஸ்திரம் தெரிந்வர்கள் வந்து அந்த விக்கிரகத்தைப் பார்த்து அதில் எவ்வித தோஷமும் இல்லை என்று தெளிவாகக் கூறிய பிறகே எடுத்துச் செல்ல வேண்டும் என்று கூறித் தடுத்து விட்டார்.

மன்னர் தம் அமைச்சர் கூறியது பற்றி யோசித்தார். ஆம். சில விக்கிரகங்களில் தோஷம் இருக்கக்கூடும். அதைப் போக்க தக்க ஹோமங்களை செய்தாக வேண்டும். அப்போது தான் அவற்றைப் பிரதிஷ்டை செய்து வழிபடவும் முடியும். எனவே அமைச்சர் கூறிய யோசனையை ஏற்றார்.

மன்னரும் அப்படியே செய்யலாம் எனக் கூறி சில வீரர்களைக் காவலுக்கு வைத்து விட்டு அங்கிருந்து கிளம்பிச் சென்றார்.

(தொடரும்)





# மன்னாதி மன்னன்

தன் முயற்சியில் சற்றும் மனம் தளராத விக்கிரமன் மீண்டும் மரத்தின் மீது ஏறி அங்கு தொங்கும் உடலைக் கீழே வீழ்த்தினான். பின்னர் கீழே இறங்கி அதனைச் சுமந்து கொண்டு அவன் மயானத்தை நோக்கி செல்கையில் அதனுள்ளிருந்த வேதாளம் எள்ளி நகைத்து "மன்னனே! நீ ஏதோ ஒரு மாபெரும் வேலையை மேற்கொண்டு இந்த பயங்கர நள்ளிரவில் சிரமப்படுவதாகத் தெரிகிறது. சில சமயங்களில் ஒரு வேலை முடிவடையும் நிலையில் இருக்கும் போது மிகச் சிறந்த அறிவாளிகள் கூட அதுவரை தாம் கடைப்பிடித்து வந்த கொள்கையைக் கைவிட்டு விடுகிறார்கள். இதனால் அவர்கள் விரும்பிய பலன் கிட்டாமலேயே போய் விடுகிறது. இதற்கு உதாரணமாக அமுதன் என்பவனின் கதையைக் கூறுகிறேன். கவனமாகக்

## வேதாளம் சொல்லும் கதை



கேள்" என்று கூறிக் கதையை சொல்லலாயிற்று.

வெகு காலத்திற்கு முன் மதுப்புரி என்ற நாட்டை மானசிம்மன் என்ற மன்னன் ஆண்டு வந்தான். அவனது ஆட்சி ஊழல் மிக்கதாக இருந்தது. அதனால் திறமைசாலிகளுக்கு அரசாங்கப் பதவிகள் கிடைக்கவில்லை. மக்கள் செலுத்தும் வரிப்பணம் அவர்களுக்குப் பயன்படாமல் அதிகாரிகளின் சட்டைப் பைகளுள் போயின. இதனால் பொக்கிஷத்தில் பணம் இல்லாது போகவே மன்னன் வரிகளை உயர்த்தினான். அதனால் ஓரளவு நிலை திருந்தினாலும் மறுபடியும் பணத் தட்டுப்பாடு ஏற்பட மீண்டும் வரிகள் அதிகரிக்கப் பட்டன.

அந்த நாட்டில் தாராபுரி என்ற ஊரில் அமுதன் என்ற அறிஞன் இருந்தான். அவன் எந்த சிக்கலான பிரச்னைக்கும் எளிதில் வழி கண்டு வந்தான். நாட்டில் பஞ்சம் தலை விரித்தாடி விலைவாசிகள் உயர்ந்து மக்கள் அவதிப்பட்டனர். மக்களால் வரி செலுத்த முடியவில்லை. நாளுக்கு நாள் நிலைமை மோசமாகிக் கொண்டே போயிற்று. அதிகாரிகள் எதனையும் கண்டு கொள்ளாமல் தாம் பணம் சம்பாதிப்பதிலேயே குறியாக இருந்தார்கள். இதற்கு ஒரு வழி காண அமுதன் தலை நகருக்குச் சென்றான்.

மன்னனைக் காண வேண்டும் என்றால் ரமணன் என்ற அதிகாரியை முதலில் சந்தித்தாக வேண்டும். அவனைப் பார்க்கவே அவன் வீட்டுக் காவலாளிகள் இருவருக்கு இரண்டு வராகன்கள் லஞ்சம் கொடுக்க வேண்டும். அமுதனும் அவர்களுக்கு லஞ்சம் கொடுத்து ரமணனைக் கண்டான்.

அப்போது ரமணன் அமுதனிடம் "மன்னரிடம் உனக்கு என்ன வேலை?" என்று கேட்டான். அமுதனும் "மன்னரிடம் மக்கள் படும் துயரைக் கூறி வரிகளைக் குறைக்கும்படி கேட்கப் போகிறேன்" என்றான். அதற்கு ரமணன் "மன்னருக்கு நாட்டின் நிலை தெரியும். நீ ஒன்றும் எடுத்துக் கூற வேண்டாம். பொக்கிஷத்தில் பணம் இல்லை. அதனால்

வரி வசூலித்துத்தானே ஆக வேண்டும்?" என்றான்.

அமுதனும் "பொக்கிஷம் காலி என்றால் அதை நிரப்ப மன்னன் வழி தேட வேண்டும். வரிகளை விதித்து நிரப்ப முடியாது. எனவே அதற்கான வழியை நான் மன்னரிடம் சொல்லப் போகிறேன்" என்றான்.

ரமணனும் "அந்த வழியை என்னிடம் சொல். நான் மன்னரிடம் தெரிவிக்கிறேன்" என்றான். ஆனால் அமுதனோ "அதை நான் மன்னரிடம் தான் கூறுவேன். வேறு யாரிடமும் சொல்லமாட்டேன்" என்றான்.

ரமணனும் "அப்படியா! மன்னரைக் காண வேண்டும் என்று தெருவில் திரிபவர்களெல்லாம் வந்தால் நான் உள்ளே விட்டு விடுவேனா? அவர்களைத் தடுத்து நிறுத்தவே நாங்கள் இருக்கிறோம். மன்னரைக் காண்பது எளிதல்ல அதற்குப் பல முறைகள் உள்ளன அவற்றைக் கடைப்பிடித்தாலே நீ மன்னரைக் காண முடியும். நீ எனக்கு நூறு வராகன்கள் கொடுத்தால் என் மேலதிகாரியைச் சந்திக்க அனுமதிக்கிறேன். அவருக்கு நீ இருநூறு வராகன்கள் கொடுத்தால் அவர் உன்னைத் துணை மந்திரியிடம் அனுப்புவார். நீ துணை மந்திரிக்கு ஐநூறு வராகன்கள் கொடுத்தால் மந்திரியைக் காண முடியும். நீ மந்திரிக்கு ஆயிரம் வராகன் கொடுத்தால் மன்னரைக் காணலாம். இதுதான் எங்கள் மாமூல்" என்றான் சற்றும் கூச்சப்படாமல்.





மன்னனைக் காணத் தன்னால் முடியாது என்று கண்டு கொண்ட அமுதன் தலைநகரிலிருந்து காட்டை நோக்கிச் சென்றான். நடுக்காட்டில் அவன் ஒரு முனிவரைக் கண்டான். அவரும் "நல்லவேளை! யாராவது இங்கு வருவார்களா என்று பார்த்துக் கொண்டிருந்தேன். நீ வந்தாய். நான் இமயமலைக்குப் போகப் போகிறேன். என்னிடமுள்ள மகிமை வாய்ந்த கல் மோதிரத்தை உன்னிடம் ஒப்படைக்கிறேன்" எனக் கூறி ஒரு மோதிரத்தை அவனிடம் கொடுத்தார்.

அது வைர மோதிரம். அதன் முன் அநியாயக்காரன் எவனாவது வந்தால் மோதிரக் கல் நீல நிறமாக மாறும். மோதிரத்தை அணிந்தவன் பஞ்சாட்சர மந்திரம் ஜெபித்தால் அவன் விரும்புவது நடக்கும். இந்த சக்திகளை முனிவர் கூற அமுதன் அறிந்து கொண்டான்.

மோதிரத்தை அணிந்து கொண்டு அமுதன் முதலில் தன் ஊரான தாராபுரிக்கு சென்றான். அங்குள்ள தன் நண்பர்களை அழைத்துக் கொண்டு தலைநகரில் அம்மோதிரத்தின் சக்தியால் ஒரு பணக்காரனின் வீட்டில் தங்கினான்.

அமுதன் தலைநகரின் வீதிகளில் திரிந்து யார் யார் அநியாயக்காரர்கள் என விசாரித்துத் தெரிந்து கொண்டான். அப்படிப்பட்டவர்கள் நூற்றுக்கணக்கில் இருப்பது கண்டு அவன் மனம் மிகவும் வருந்தியது. முதலில் அமுதன் அவ்வூரின் மிகப் பெரிய வியாபாரியின் வீட்டை அடைந்தான்.

அவன் அந்த வியாபாரியின் முன் நின்றதுமே அவனது மோதிரக் கல் நீல நிறமாக மாறியது. அப்போது அவன் அந்த வியாபாரியிடம் "நீ அநியாய வழியில் பணம் சம்பாதிக்கிறாய். அதற்குத் தண்டனையாக நீ ஒவ்வொரு மாதமும் எனக்குப் பத்தாயிரம் வராகன்கள் கொடுத்து வர வேண்டும்" என்றான். வியாபாரியோ "நீ யார்? நான் ஒன்றும் பணம் கொடுக்க முடியாது. உன்னால் முடிந்ததைச் செய்" என்று கருவினான்.

மறுவிநாடியே அமுதன் "உன்



கைகால்கள் செயலற்றுப் போகட்டும்" என்று கூறி பஞ்சாட்சர மந்திரத்தை உச்சரித்தான். அவ்வளவுதான்! அந்த வியாபாரியின் கை கால் நரம்புகள் இழுக்க அவன் பொத்தென கீழே விழுந்தான். அவன் அமுதனுக்குப் பணம் கொடுத்த பிறகே முன்போல ஆனான். இப்படியே அமுதன் பல அநியாயக்காரர்களிடமிருந்து பணம் பெற்றான்.

இவ்வாறு பெற்ற பணத்தில்தான் தங்க ஒரு மாளிகையை வாங்கிக் கொண்டு அமுதன் ஏழை எளியவர்களுக்குப் பணம் கொடுத்து வரலானான். அவன் ஏழைகளுக்குப் பணம் கொடுக்கிறான் என்ற செய்தி எங்கும் பரவவே அவனது வீட்டின் முன் கூட்டம் எப்போதும் இருந்தது. அவனும் சளைக்காமல் அவர்களுக்குத் தான் பெற்று வரும் பணத்தைக் கொடுத்து வந்தான்.

சில பணக்காரர்கள் மன்னனிடம் போய் அமுதன் தங்களை பயமுறுத்திப் பணம் பறிக்க முயல்கிறான் என்று புகார் செய்தனர். அமுதனைப் பிடித்து வர உத்தரவிடப்பட்டது. அதை நிறைவேற்ற ரமணன் பத்து வீரர்களுடன் சென்றான்.

ரமணன் "நீ எல்லோரையும் ஏமாற்றி பணம் பறிக்கிறாய். உன்னைக் கைது செய்யப் போகிறேன்" என்றான். அமுதனும் சிரித்தவாறே "ஊரை ஏமாற்றுபவன் நீதான். முதலில் உன் அநியாயச் செயல்களுக்கு என்ன பதில்? நீ உடனே இவர்களை உன் வீட்டிற்கு அனுப்பி ஐயாயிரம் வராகன்கள் எடுத்து வந்து என்னிடம் கொடுக்கச் சொல். அதற்குப் பின் மாதா மாதமும் ஐயாயிரம் வராகன்கள் கொடுத்து வர வேண்டும்" என்றான்.

ரமணன் முடியாது எனவே அமுதன் பஞ்சாட்சர மந்திரத்தை ஜெபித்து அவன் கை கால்கள் செயலற்றுப் போகட்டும் என்றான். மறு நிமிடமே ரமணன் பொத்தெனக் கீழே விழுந்தான். அவனால் எழுந்திருக்க முடியவில்லை. ரமணன் உடனே வீரர்களைத் தன் வீட்டிற்கு அனுப்பி ஐயாயிரம் வராகன்கள் கொண்டுவரச் செய்தான். அதை



அவன் அமுதனிடம் கொடுத்ததும் அவன் முன் போலாகி எழுந்து நடந்தான்.

இதுபோல ரமணனின் மேலதிகாரி, துணை மந்திரி, மந்திரி என்று யாவரும் அமுதனைப் பிடிக்கப் போய் அபராதம் செலுத்த வேண்டியதாயிற்று. அவர்களும் மாதா மாதம் குறிப்பிட்ட தொகையை அமுதனுக்குச் செலுத்தி வந்தனர்.

இந்த விவரங்கள் எல்லாம் மன்னனுக்குத் தெரிந்தது. எனவே அமுதனைக் காண அவனே சென்றான். அமுதனும் அவனை வணங்கினான். மன்னனும் "உன்னைப் பற்றி நிறைய கேள்விப் படுகிறேன். எல்லோரையும் பயமுறுத்தி நடுங்க வைக்கும் நீ எனக்கு இவ்வளவு மரியாதை செலுத்துகிறாயே" என்று ஆச்சரியப் பட்டுக் கேட்டான்.

அமுதனும் "நான் இப்போது மன்னர்க்கும் மன்னன்" எனவே மானசிம்மனும் "ஆம் உன்னிடம் மாபெரும் சக்தி உள்ளது. எல்லோரையும் பயமுறுத்தி நடுங்க வைக்கும். நீ மன்னாதி மன்னன்தான்" என்றான். அமுதனும் "நீங்கள் மன்னராக இருப்பதால் வரி வசூலிக்கிறீர்கள். பொக்கிஷம் காலி என வரியை உயர்த்துகிறீர்கள். ஆனால் அது ஏன் காலி ஆயிற்று என்று யோசித்துப் பார்த்தீர்களா? பொக்கிஷப் பணம் அநியாயக்காரர்களிடமும் ஊழல் அதிகாரிகளிடமும் போய்ச் சேர்ந்துவிட்டது" என்றான்.

மன்னனும் "என் ஆட்சியில் ஊழலா? இல்லவே இல்லை" எனவே அமுதன் "அப்படியானால் உங்கள் மந்திரிகளும், அதிகாரிகளும், வியாபாரிகளும் எனக்கு பயந்து பணம் ஏன் கொடுத்து வருகிறார்கள்?" என்று கேட்டான்.

அப்போதுதான் மன்னனுக்கு ஆட்சியின் நிலை என்னவென்று புரிந்தது. அவன் அமுதனிடம் "ஆமாம். நீ சொல்வது சரியே, இப்போது என் ஆட்சியில் ஊழல் மலிந்துதான் இருக்கிறது" என்றான். அப்போது அமுதன் தன்னிடமுள்ள மோதிரத்தின் சக்தியைக் கூறவே மன்னன் அந்த மோதிரத்தைத் தனக்

குக் கொடுக்கும்படி வேண்டினான்.

அமுதனோ "நான் கொடுக்க மாட்டேன். இது எனக்குப் பிறகு என் வம்சத்தவரிடம் இருக்கும். நான் ஊழலைக் களைந்து விட்டேன். இனி யாவது ஊழல் நடக்காமல் பார்த்துக் கொள்வதாக எனக்கு வாக்குக் கொடுங்கள்"என்று கூறி மன்னனிடம் அந்த வாக்குறுதி பெற்றுக் கொண்டு கிளம்பினான். ஆனால் வழியில் அவன் அந்த மோதிரத்தை ஒரு குளத்தில் வீசி எறிந்து விட்டான்.

வேதாளம் இக்கதையைக் கூறி "மன்னா! மக்கள் நலனைக் கருதும் அமுதன் அந்த மோதிரத்தை மன்ன னிடம் ஏன் கொடுக்கவில்லை? அந்த மோதிரத்தை வைத்துக் கொண்டு அவனே நாட்டின் மன்னனாகக்கூட ஆகி இருக்கலாமே. மோதிரம் தன் குடும்பத்தாரிடம் இருக்கும் என அமுதன் கூறிவிட்டு அதனை ஏன் குளத்துள் விட்டெறிந்தான்? இக் கேள்விகளுக்குச் சரியான விடை தெரிந்திருந்தும் நீ கூறா விட்டால் உன் தலை வெடித்துச் சுக்குநூறாகி விடும்" என்றது.

விக்கிரமனும் "அமுதன் மக்க ளுக்கு நன்மை புரிய வேண்டும் என்ற நோக்கில் தான் தலைநகருக்கு வந்தான். மன்னனாக வேண்டும் என்றல்ல;மன்னன் மந்திர பலத்தால் ஆட்சிபுரியாமல் முறையாக ஆட்சி புரிய வேண்டும் என்பதற்காகவே அமுதன் அந்த மோதிரத்தை மன்ன னிடம் கொடுக்கவில்லை. தனக்குப் பின் தன் குடும்பத்தில் வருவோரும் தன்னைப் போல நேர்மையாக இருப் பார்களா என நினைத்தே எதற்கு விஷப்பரீட்சை என எண்ணி அமுதன் மோதிரத்தைக் குளத்தில் விட்டெறிந் தான், அவன் அவ்வாறு செய்ததும் சரியே" என்றான்.

விக்கிரமனின் சரியான இந்த பதிலால் அவனது மௌனம் கலை யவே அவன் சுமந்து வந்த உடலோடு வேதாளம் உயரக் கிளம்பிப் போய் மீண்டும் முருங்க மரத்தில் ஏறிக் கொண்டது.



# வெட்கமா காரணம்?

அங்க நாட்டு மன்னன் தன் மகள் அங்குலாவிற்கு ஏற்றவனை மணாளனாகத் தேர்ந்தெடுக்க ஒரு போட்டி வைத்தான். அதில் விஜயன், ஜெயன் என்ற இருவரும் சமநிலையில் முதல்வர்களாக வந்தனர். இருவரும் அரசகுமாரர்களே.

அப்போது மன்னன் தன் மகளிடம் "நாளை இருவரில் யாரைத் தேர்ந்தெடுப்பது என்று திருவுளச் சீட்டு போட்டு பார்க்கலாம். நீ எடுக்கும் சீட்டில் உள்ளவனை நீ மணந்து கொள்" என்றான்.

மன்னனுக்கோ விஜயனை மிகவும் பிடித்திருந்தது. அரசகுமாரியோ ஜெயனை மணக்க விரும்பினாள். மன்னன் தன் எண்ணம் நிறைவேற இரண்டு சீட்டுகளிலும் விஜயன் பெயரையே எழுதித் தயாராக வைத்தான். இது அரசகுமாரிக்குத் தெரிந்து போயிற்று.

மறுநாள் மன்னன் தர்பாரில் தான் கொண்டு வந்த இரு சீட்டுகளையும் குலுக்கிப் போட்டு தன் மகளிடம் "நீ இதில் ஒரு சீட்டை எடுத்து அதிலுள்ள பெயரைப் படி. அவனே உன் கணவனாவான். மற்றவனை நீ மணக்கக் கூடாது என்பது கடவுளின் திருவுள்ளம் என ஏற்போம்" என்றான்.

அரசகுமாரியும் ஒரு சீட்டை எடுத்துப் பிரித்துப் பார்த்து விட்டு மன்னனிடம் "தந்தையே! நான் என் கணவராகப் போகிறவரின் பெயரைச் சொல்ல வெட்கப்படுகிறேன். அதனால் நீங்கள் மற்ற சீட்டை எடுத்து அதிலுள்ள பெயரைப் படியுங்கள். அவரை நான் மணக்க மாட்டேன்" என்றாள்.

மன்னன் திடுக்கிட்டுப் போனான். மற்ற சீட்டிலும் விஜயன் பெயர்தானே இருந்தது. என்ன செய்வது! அதை எடுத்து அவன் படிக்க விஜயன் நிராகரிக்கப்பட்டான். ஜெயனுக்கும் அரசகுமாரிக்கும் அவள் விரும்பியபடியே விவாகம் நடந்தேறியது.



# அம்புலிமாமா அனுபந்தம் - 67



## ஆலமரம்




சித்தார்த்தர் ஆலமரத்தடியே அமர்ந்து ஞானம் பெற்று புத்தரானார். இந்த போதி மரம் உள்ள இடமே புத்தகயா எனப்படுகிறது. அசோக சக்கரவர்த்தி புத்த மதத்தைத் தழுவியபோது இம் மதத்தைப் பரப்ப தம் மகள் சங்கமித்திரையை ஸ்ரீலங்காவிற்கு அனுப்பினார். அவள் தன்னுடன் புத்தகயாவின் ஆலமரத்திலிருந்து ஒரு கிளையை எடுத்துப் போய் கி.மு. 288-ல் ஸ்ரீலங்காவில் அனுராதபுரத்தில் நட்டாள். சுமார் 2200 ஆண்டுகளுக்கு முன் நடப்பட்ட இக்கிளை பெரிய மரமாக வளர்ந்து இன்றும் உள்ளது.

ஆலமரம் மிகப் புனிதமானது என மக்கள் கருதுகிறார்கள். இதனைக் கோவில்களிலும் ஊர்ப்பொது மேடைகளிலும் வளர்ப்பதைக் காண்கிறோம். ஆல மரத்தை நட்டவருக்கு ஆயிரம் மரக்கால் புண்ணியம் எனக் கூறுவதும் உண்டு. இதன் வேர்கள் பூமிக்குள் வெகு தூரம் செல்லும் இந்த மரத்தையோ இதன் கிளைகளையோ வெட்டுவது என்பது பழக்கத்தில் இல்லை.

ஆலமரத்தின் இலைகள் இதயம் போன்று வடிவில் இருக்கும். இரண்டு பாகமாக வரியால் பிரிக்கப்பட்டு குறுக்கே கோடுகள் உள்ளதையும் காணலாம். இலையின் நுனிப்பபாகம் சிறுத்து வால் போல் நீண்டிருக்கும். இலைகள் கீழ்நோக்கித் தொங்குவதால் காற்று வீசும் போது சலசலப்பு ஏற்படும். இதன் பழங்களைப் பறவைகள் மிகவும் விரும்பி உண்கின்றன. பறவைகள் இதன் விதைகளை எல்லா இடங்களிலும் சிதற அடிப்பதால் பாழடைந்த சுவர்களுக்கு இடையேயும் பாறைகளுக்கு இடையேயும் கூட இம்மரங்கள் முளைத்து விடுகின்றன.




# திரிபிடகம்

**கௌ**தம புத்தர் போதி மரத்தடியே அமர்ந்து ஞானம் பெற்றார். அவர் தனது பூத உடலை விடுத்தது வைகாசி மாதப் பௌர்ணமி அன்றுதான். அதனால் இந் நாளை புத்த பூர்ணிமா என்கிறார்கள்.

வாழ்க்கை துன்பமானதால் அறிவாளிகள் பிறப்பும் இறப்பும் இல்லாத 'நிரிவாண முக்தியை அடைய முயற்சிக்க வேண்டும் என்று கௌதம புத்தர் (கி.மு. 566–486) போதித்தார். துயரங்களுக்குக் காரணம் மனதில் எழும் ஆசைகளே. ஆசை களை விட்டொழித்தால் கர்ம பந்தம் போய் நிர்வாண நிலையை அடையலாம் என்று அவர் தம் சீடர்களுக்கு உபதேசித்தார். ஆனால் அவரது உபதேசங்கள் அவரது காலத்தில் எழுத்து வடிவம் பெறவில்லை. அவரது நேரடி சீடர்கள் கூட அவற்றை எழுதி வைக்கவில்லை.

ஆனால் புத்த மதத்தைத் தழுவிய பண்டிதர்கள் புத்தரது உபதேசங்களை எழுதி வைத்துக் கொண்டு தம்மாணவர்களுக்குச் சொல்லிக் கொடுத்து வந்தார்கள். புத்தர் இறந்து இருநூறு ஆண்டுகள் கழிந்தபின் அசோக சக்கரவர்த்தி பௌத்த பண்டிதர் களை ஒன்று கூட்டி புத்தரது உபதேசங்களை வரிசைபடுத்தி எழுதி வைக்கச் செய்தார். இவை விநய பிடகம், சுத்தபிடகம், அபிதம்ம பிடகம் என மூன்று பகுதி களாகத் தொகுக்கப்பட்டன.

ஆத்மீக சங்கத்திற்கு இன்றியமையாத நியமங்களை விநய பிடகம் கூறுகிறது. நிர் வாணமுக்தி அடையக் கடைப்பிடிக்க வேண்டிய முறைகளை சுத்த பிடகமும் அபிதம்ம பிடகமும் கூறுகின்றன.

இம் மூன்றில் சுத்த பிடகமே முக்கியத்துவம் பெற்றது. இதிலிருந்து எடுக்கப்பட்ட 423 சூத்திரங்களே 'தம்மபதம்' என்ற நூலாகப் புகழ் பெற்றது.

இந்த மூன்று பிடகங்களும் அக்காலத்தில் வழக்கில் இருந்த பாலிமொழியில் எழுதப்பட்டன. இப்போது இவை ஒரு சில பண்டிதர்கள் மட்டுமே புரிந்து கொள்ளும் நிலையில் உள்ளன.

திரிபிடக சூத்திரங்கள் லயமயமாய் உட்பொருள் கொண்டவை. அதற்கு உதா

ரணம் "துவேஷம் துவேஷத்தால் முடிவுறாது துவேஷம் இல்லாதிருந்தாலே துவேஷம் மறையும்."

"மலரின் மணம் காற்று வீசும் திசையை எதிர்த்து பரவாது. ஆனால் நேர்மையான வனின் மணம் (குணம்) கொடிய சக்திகளை எதிர்த்து எங்கும் பரவும்"

பௌத்த மதத்திற்கு திரிபிடகங்கள் மிக முக்கியமானவை. இதுபோல புத்த ஜாதகக் கதைகளும் ஆகும். இவை புத்தர் முன் பிறப்பில் போதி சத்வராகப் பலமுறை பிறந்ததாயும் சில சமயங்களில் மிருகங்களாகக் கூடப் பிறந்ததாயும் கூறுகின்றன. இதனால் வாழ்வின் அனுபவங்கள் எல்லாம் அவருக்குத் தெரிந்ததாய் சிறு கதைகள் போதி சத்வரின் நேர்மையை எடுத்துக் காட்டி மனிதர்கள் எப்படி அறநெறியில் செல்ல வேண்டும் என விவரிக்கின்றன.



# உங்களுக்குத் தெரியுமா?

1. யூதர்களின் நாட்டை நிறுவியவர் யார்?
2. செஞ்சிலுவைச் சங்கத்தை ஆரம்பித்தவர் யார்?
3. தென் அமெரிக்காவின் 'பொலீவியா' நாட்டிற்கு ஏன் அப்பெயர் வந்தது?
4. நபிகள் நாயகத்திற்குப் பின் வந்த முதல் கலீபா யார்?
5. குவினைனைத் தயாரிக்க உதவும் மரம் எது?
6. பீரங்கியை முதலில் உபயோகித்து நம் நாட்டின் மீது தாக்குதலை நடத்திய ஆக்கிரமிப்பாளர் யார்?
7. 1964-ல் இலக்கியத்திற்கான நோபல் பரிசை ஏற்க மறுத்த பிரஞ்சு தத்துவ மேதை யார்?
8. பூமி உருண்டையானது என முதன் முதலாக வாதம் புரிந்தவர் யார்?
9. சந்திரனுக்கு தானே ஒளிவிடும் சக்தி இல்லை என முதலில் கூறியவர் யார்?
10. மிகப் பெரிய ஆப்பிரிக்க நாடு எது?
11. பௌத்த மதத்தின் இரு முக்கிய பிரிவுகள் யாவை?
12. ஒரு மாதத்திற்கு மட்டும் அமெரிக்க ஜனாதிபதியாக இருந்தவர் யார்?
13. ஐரோப்பிய நாடொன்றின் தலைநகர் தீவுகளில் அமைந்துள்ளது. அந்நாடு எது? தலைநகர் எது?
14. அச்சுயந்திரத்தை 15-வது நூற்றாண்டில் கண்டு பிடித்தவர் யார்?
15. ஜப்பானின் அரசியல் சட்டத்திற்கு எழுத்து வடிவம் கொடுத்த மன்னர் யார்?
16. உலகில் முதல் பெண் பிரதமர் யார்?

# விடைகள்

1. அப்ரஹாம்
2. ஹென்ரி டு பாண்ட்
3. 1825-ல் ஸ்பெயினிடமிருந்து விடு தலை வாங்கிய சைமன் பொலிவர் பெயரில்
4. அபுபெக்கர்
5. சிங்கோனா
6. பாபர்.
7. ஜீன் பால்சார்த்தே
8. பிதாகரஸ்.
9. அனாக்ஸா கோராஸ்
10. சூடான்.
11. மகாயானம், ஹீனாயானம்
12. வில்லியம் ஹென்றி ஹாரிசன்
13. ஸ்வீடன், ஸ்டாக் ஹோம்
14. ஜோஹன் கட்டிஸ்பர்க்
15. மைஜி சக்கரவர்த்தி
16. சிரிமாவோ பண்டாரநாயகே (ஸ்ரீ லங்கா)



# மருமகள் எப்படி?

மணலூரில் மாதவ சாஸ்திரி என்ற பணக்காரப் பண்டிதர் இருந்தார். அவருடைய மகன் கிருஷ்ண சாஸ்திரியும் வேத சாஸ்திரங்களை நன்கு கற்றவன். அவனுக்கு புத்திசாலியான பெண்ணாகப் பார்த்து மணம் செய்து வைக்க மாதவ சாஸ்திரி விரும்பினார்.

அவனுக்குத் தம் பெண்ணைக் கொடுப்பதாகப் பலர் வந்தனர். ஆனால் மாதவ சாஸ்திரிக்கு எந்தப் பெண்ணும் பிடிக்கவில்லை. கீழூரிலுள்ள குப்பு சாஸ்திரியின் பெண் மிகவும் புத்திசாலி எனக் கேள்விப்பட்டு மாதவ சாஸ்திரி தாம் பெண்ணைப் பார்க்க வருவதாக குப்பு சாஸ்திரிக்குத் தகவல் கொடுத்து நாளையும் குறிப்பிட்டிருந்தார்.

குறித்த நாளில் மாதவ சாஸ்திரியும் அவர் மனைவியும் கிருஷ்ண சாஸ்திரியும் தம் குதிரை வண்டியில் கீழூருக்குப் போய் குப்புசாஸ்திரியின் வீட்டு வாசலில் இறங்கினார்கள். குப்புசாஸ்திரியும் அவர்களை மரியாதையுடன் வரவேற்று வீட்டினுள் அழைத்துச் சென்றார்.

சற்று நேரத்திற்குப் பின் குப்பு சாஸ்திரியின் மனைவி காமாட்சி தன் மகள் மீனாவை நன்கு அலங்கரித்து அவர்கள் முன் அழைத்து வந்தாள். மீனா மாதவ சாஸ்திரியையும் அவர் மனைவியையும் கிருஷ்ண சாஸ்திரியையும் நமஸ்கரித்து எழுந்தாள். மூவருக்கும் பெண் அழகானவள் என்று தெரிந்து போயிற்று. இனி அவளது புத்திசாலித்தனத்தைத் தான் பரீட்சித்துப் பார்க்க வேண்டும்.

குப்புசாஸ்திரி அப்போது மாதவ சாஸ்திரியிடம் "எனக்கு மூன்று பெண்கள், ஒரு மகன். மூத்த பெண் மீனா. மற்ற இரு பெண்களும் மகனும் அவர்களது தாய் மாமா வீட்டிற்குப் போயிருக்கிறார்கள்" என்றார்.

- சிவனார் செல்வன் -



மாதவ சாஸ்திரியும் "உங்கள் பெண் மீனா தங்க விக்கிரகம் போல அழகாக இருக்கிறாள். அவள் புத்திசாலியா என்று பரீட்சிக்கலாமா? என் மகனைக் கேள்விகள் கேட்கச் சொல்கிறேன். உங்கள் மகள் சரியாக பதில் சொல்லிவிட்டால் என் மருமகளாக ஏற்றுக் கொள்கிறேன்" என்றார்.

குப்பு சாஸ்திரியும் "ஆகா! தாராளமாகக் கேட்கலாம். என் மகள் நன்கு படித்தவள்" என்றார். மாதவ சாஸ்திரியும் தன் மகனைப் பார்த்து "நீ கேள்விகளைக் கேட்கலாம்" எனவே கிருஷ்ண சாஸ்திரியும் "உங்கள் வீட்டில் முகம் பார்க்கும் கண்ணாடிக்கு எதிரிகள் எவ்வளவு பேர்?" எனக் கேட்டான்.

மீனாவும் "யாரும் இல்லை. என் தங்கைகளும் தம்பியும் அதன் நண்பர்களே" என்றாள். அப்போது கிருஷ்ண சாஸ்திரி "அப்படியானால் உன் விஷயம்?" எனக் கேட்கவே மீனாவும் "கை வளையல் அழகைக் கூட நீங்கள் கண்ணாடியில்தான் பார்ப்பீர்களா?" என்று எதிர்க் கேள்வி கேட்டாள்.

கிருஷ்ண சாஸ்திரியும் "முன்பு கண்ணாடிக்கு நண்பனாக இருந்து இப்போது விரோதியானவர்கள் உன் வீட்டில் எவ்வளவு பேர்?" எனக் கேட்டான். மீனாவும் "அப்படி மாறியவர் எங்கள் வீட்டில் ஒருவரே. அவர் என் பாட்டி. அவரும் அண்மையில்தான் காலமானார்" என்றாள்.

கிருஷ்ண சாஸ்திரியும் "உங்கள் ஊரிலும் மாதம் ஒரு முறை அமாவாசை வருமா அல்லது இரவிலும் பௌர்ணமி நிலவா?" என்று கேட்டான். மீனாவும் "எங்கள் ஊரில் அமாவாசை இரவிலும் பௌர்ணமி நிலவுதான். எங்கள் ஊரில் அமாவாசை இரவைப் பார்த்தவர்களே இல்லை" என்றாள்.

கிருஷ்ண சாஸ்திரியும் "சரி, கோடை காலத்திலும் பறவைகள் உங்கள் ஊர் வயல்களில் வந்து தங்குகின்றனவா அல்லது மழை காலத்தில் மட்டும் வருகின்றனவா?" என்று கேட்டான்.

மீனாவும் "எங்கள் ஊர் வயல்

களில் வருடம் முழுவதும் வந்து தங்கும்" என்றாள். கிருஷ்ண சாஸ்திரியும் "சரி. ஆகாயம் முழுவதும் பந்தலாகி பூமி முழுவதிலும் ஆசனம் போட்டு உன் தந்தை நம் கல்யாணத்தை நடத்துவாரா?" எனக் கேட்க மீனாவும் "அப்படிச் செய்தால் நம் கல்யாணம் ஆனதும் என் வீட்டவர்களுக்கு ஆகாயமே வீடாகி விடும்" என்றாள்.

அதை எல்லாம் கேட்டுக் கொண்டிருந்த மாதவ சாஸ்திரி தம் மகனிடம் "நீ இவ்வளவு கேட்டது போதும். பெண் அழகோடு புத்திசாலி எனவும் தெரிந்து விட்டது" எனக் கூறிவிட்டு குப்பு சாஸ்திரியிடம் "நீங்கள் பஞ்சாங்கம் பார்த்து முகூர்த்த நாளைக் கூறுங்கள். அன்று இவர்களது விவாகத்தை நடத்தி விடலாம்" என்றார்.

குப்பு சாஸ்திரியும் மகிழ்ந்து போய் "ஆகா! அப்படியே செய்யலாம்" எனவே மாதவ சாஸ்திரியும் அவரிடம் விடை பெற்றுக் கொண்டு தம் மனைவியையும் மகனையும் அழைத்துக் கொண்டு தம் குதிரை வண்டியில் அமர்ந்து ஊர் திரும்பினார்.

வழியில் அவரது மனைவி "நம் கிருஷ்ணன் அந்தப் பெண்ணிடம் கேட்ட கேள்விகளும் அந்தப் பெண் கூறிய விடைகளும் எனக்குப் புரியவில்லையே" என மாதவ சாஸ்திரியிடம் கூறினாள். அவரும் "உனக்குப்



புரிந்திருக்காது என்று தான் நானும் நினைத்தேன். முதலில் கிருஷ்ணன் கண்ணாடிக்கு விரோதி உண்டா என்று கேட்டான். அதன் பொருள் அவர்கள் வீட்டில் விகாரமானவர்கள் இருக்கிறார்களா என்பதே. அவள் இல்லை என்று கூறியதோடு தன் தங்கைகளும் தம்பியும் அழகானவர்களே என்று கூறி தானும் அழகானவள் என்று கூறினாள். தானும் அழகானவள் என்பதைக் கிருஷ்ணனே நேரில் பார்த்துக் கொண்டிருக்கிறானே என்று கூறவே வளையல்களைப் பார்க்கக் கண்ணாடி தேவை இல்லை. என்று கூறினாள். கண்ணாடிக்கு விரோதி இருந்தாரா என்றதற்கு அவளது பாட்டி இளமையில்

அழகாய் இருந்து முதுமையில் அழகை இழந்து இறந்தாள் என்று கூறினாள். அவ்வூரில் அமாவாசை இரவிலும் பௌர்ணமி நிலவு என அவள் கூறியது அவ்வூரில் இரவில் தெருக்களில் பிரகாசமான விளக்குகள் எரிகின்றன என்று பொருள். அவள் தம் ஊர் வயல்களுக்கு ஆண்டு முழுவதிலும் பறவைகள் வந்து போகின்றன என்பதின் பொருள் அங்குள்ள வயல்களில் முப்போக சாகுபடி செய்யப்படுகிறது என்பதாம். இது அங்குள்ள செழுமையைக் குறிப்பதாகும். முடிவில் அவள் விவாகத்தை அவளது தந்தை ஆடம்பரமாக நடத்தினால் அதற்கு ஏராளமாகச் செலவாகி விடும் என்றும் அதனால் அவளது பெற்றோர்கள் தாம் வசிக்கும் வீட்டை விற்று விட்டு ஓட்டாண்டியாகி ஆகாயத்தையே கூரையாக கொண்டு திறந்த வெளியில் வசிக்க வேண்டி வரும் என்றும் சொன்னாள். இது தான் கிருஷ்ணன் கேட்ட கேள்விகளுக்ும் அந்தப் பெண் கூறிய பதில்களுக்குமான பொருள்" என்று கூறினார்.

அது கேட்ட மாதவ சாஸ்திரியின் மனைவி ஆச்சரியப்பட்டு "அடேயப்பா! நம் கிருஷ்ணன் கேட்ட கேள்விகளில் இவ்வளவு அர்த்தம் இருக்கிறதா? பேஷ்! பேஷ் இதை எல்லாம் சட்டெனப் புரிந்து கொண்டு அந்தப் பெண்ணும் 'டக்டக்'கென்று பதில் சொன்னாளே அவளும் மிகவும் புத்திசாலிதான். நம் கிருஷ்ணனுக்கு ஏற்றவள்தான்" என்றாள்.

மாதவ சாஸ்திரியும் "அதற்காகத்தான் இத்தனை நாட்கள் தேடித் தேடிப் பார்த்தேன். வந்த சம்மந்தங்கள் எல்லாம் சரிப்படவில்லை ஆனால் இந்தப் பெண்ணைப் பற்றிக் கேள்விப்பட்டு நானே வலியப் போய்ப் பார்த்து சம்மந்தம் செய்யத் தீர்மானித்தேன். உனக்கும் திருப்தி தானே" என்று கேட்க அவர் மனைவியும் ஆம் என்று தலையை ஆட்டினாள்.



# அம்புலிமாமா செய்திகள்




## மூச்சை அடக்குவதில் சாதனை!

பிராணவாயு இல்லாமல் மனிதன் எவ்வளவு நேரம் இருக்க முடியும் என்பதை அறிய ஸ்வீடன் நாட்டில் ஜியோபிசியலாஜிகல் ஆய்வுக் கூடம் ஒரு சோதனையை நடத்தியது. அதில் பீட்டர் ஹிர்வெல் என்ற 27 வயது இளைஞர் முகத்தில் எவ்வித சாதனமும் அணியாமல் 6 நிமிடங்கள் 3 விநாடிகள் நீரில் மூழ்கி மூச்சை அடக்கிக் காட்டி ஒரு புதிய சாதனையை ஏற்படுத்தினார்.

## வட துருவத்திற்குத் தனியாகப் பயணம்!




இங்கிலாந்தைச் சேர்ந்த ரூபர்ட்ஹுடோ என்ற 32 வயது இளைஞர் துணிச்சலுடன் நடந்தே வட துருவத்தை அடையக் கிளம்பி விட்டார். கூட பிராண வாயுவையோ வேறு எதையுமோ எடுத்துச் செல்லவில்லை. கனடாவின் வார்ட் ஹண்ட் தீவிலிருந்து வட துருவம் 1100 கி.மீ. இந்த தூரத்தை இவர் தனியாகவே நடந்து சென்று வடதுருவத்தை அடைந்து விட்டால் அதுவே முதலாவது உலக சாதனையாம்.

## பட்டம் பறக்கவிடும் விழா

மார்ச் கடைசி வாரத்தில் பட்டம் பறக்கவிடும் விழா தாய்லாந்தில் ஆரம்பமாகியது. இதில் பனிரெண்டு நாடுகள் கலந்து கொண்டன. தலைநகர் பாங்காக்கில் பல வண்ணங்களில் பல உருவப் பட்டங்கள் வானில் பறந்தன. ஜெர்மனியின் சார்பில் பறக்க விடப்பட்ட 80 மீட்டர் செண்டிபாட், ஜப்பானின் 'வாரியர்' 5 மீ, இந்தோனேசியா பட்டம் மலேசியா தங்க நிறப் பட்டம், நேபாளின் வண்ணப் பட்டம், அமெரிக்காவின் 'நோ விண்ட்' பட்டம் யாவரையும் கவர்ந்தவை யாகும்.





# பேரனிடம் பாசம்

வெகுநாட்களுக்கு முன் பரத புரியில் பரமன் என்ற இளைஞன் இருந்தான். அவன் தன் தந்தை இறந்ததும் தன் தாயை பக்தி சிரத்தை யுடன் கவனித்து வந்தான். இதனால் அவனால் எந்த உத்தியோகமும் பார்க்க முடியவில்லை. நாள் முழுவதும் தாயாருக்குப் பணிபுரிவதிலேயே கழிந்தது.

அதைக் கண்டு அவனது தாயார் "நீ இப்படியே எவ்வளவு நாட்களுக்குக் கஷ்டப்படப் போகிறாய்? பேசாமல் ஒரு கல்யாணத்தை செய்து கொள். உன் மனைவி எனக்குப் பணிவிடை செய்வாள்" என்றாள். பரமனும் தன் தாய் சொன்னபடியே பாமா என்ற பெண்ணை மணந்து கொண்டு வந்தான்.

பரமனும் மனைவியிடம் பிரியமாக இருந்தான். தன் தாய் மீது அவன் கொண்டுள்ள பாசம் குறைந்து விடவில்லை. அதுகண்டு பாமா "என் கணவர் என் மீதும் அன்பு கொண்டுள்ளார். தாயின் மீதும் அன்பு கொண்டிருக்கிறார். இந்தத் தாயார் இல்லாதிருந்தால் இவரது முழு அன்பும் எனக்குத்தானே கிடைத்திருக்கும்" என எண்ணினாள்.

இதனால் அவள் தன் கணவனிடம் கோள் சொல்லலானாள். "உங்கள் அம்மாவுக்கு என்னைக் கண்டாலே பிடிக்கவில்லை. எதற்கெடுத்தாலும் குற்றம் குறை கூறுகிறார். சூடான உணவு பரிமாறினால் ஏன் இவ்வளவு சூடு என்று கத்துகிறார். கொஞ்சம் ஆறின சாதம் போட்டால் ஏன் சூடாக இல்லை என்று எரிந்து விழுகிறார். என்னால் அவரை எவ்விதத்திலும் திருப்திப்படுத்த முடியவில்லை" என்று கூறிக் கண்ணீர் உகுத்தாள்.

பரமன் மனைவி கூறியதை நம்

– கி. சுதா –

பினான். தானும் தன் மனைவியும் சந்தோஷமாக வாழ்வதைக் காணத் தன் தாயால் பொறுக்க முடிய வில்லை என அவன் எண்ணினான். அதனால் அவன் ஒருநாள் தன் தாயாரிடம் "அம்மா! நீ இங்கு சுக மாக இருக்கவில்லை. அதனால் வேறு எங்காவது போய் சுகமாக இருக்கலாமே" என்றான்.

இது தன் மருமகளின் துர் போதனையின் பலன் எனப் புரிந்து கொண்ட அவள் "அப்படியே போகி றேனப்பா" என்ற கூறி அதே ஊரி லுள்ள தன் உறவினன் வீட்டில் போய் இருந்து அங்கு வீட்டு வேலை களைச் செய்து வரலானாள்.

மாமியார் வீட்டை விட்டுப் போய் சில மாதங்களுக்கு பின் பாமா ஒரு ஆண் குழந்தையைப் பெற்றெடுத் தாள். அப்போது அவள் "என் மாமியார் வீட்டை விட்டுப் போனதால் தான் எனக்கு ஆண் குழந்தை பிறந் தது" என்று எல்லோரிடமும் சொல்லி பூரித்துப் போனாள்.

இதைச் சிலர் நம்பினர். வேறு சிலரோ கிழவியைக் கண்டு "உன் மருமகள் நீ வீட்டை விட்டுப் போன தால்தான் தனக்குக் குழந்தை பிறந்த தாகக் கூறிக் கொண்டு திரிகிறாள்" எனச் சொன்னார்கள்.

இதைக் கேட்டதும் கிழவிக்கு எரிச்சல் மூண்டது. "இனி என்ன இருக்கிறது? தர்ம தேவதை இறந்து விட்டாள். அவளுக்கு எள்ளும் தண்ணீரும் "இறைக்கிறேன்" என்று கூறி எள்ளையும் நீரையும் எடுத்துக்



கொண்டு மயானத்திற்குச் சென்றாள். அங்கு விரட்டி வைத்து நெருப்பு மூட்டினாள்.

அப்போது அங்கு ஒரு முனிவர் வந்தார். அவர் கிழவியைப் பார்த்து "யாரம்மா இறந்தது?" என்று கேட்டார். கிழவியும் "தர்ம தேவதைதான் போய் விட்டாள். அவளுக்கு எள்ளும் பிண்ட உருண்டையும் போட வேண்டும்" என்றாள்.

முனிவரும் "தர்ம தேவதை இறந்தாளா! யார் இதை உன்னிடம் சொன்னது?" என்று கேட்டார். கிழவியும் "யார் சொல்ல வேண்டும்? அதர்மம்தான் தலை தூக்கி நிற்கிறதே. என்னை வீட்டை விட்டு விரட்டியதால் என் மருமகள் பிள்ளை பெற்றாள் என்றால் அதர்மம் தலை தானே தூக்கியது!" என்றாள்.

முனிவர் அவளிடமிருந்து விவரம் தெரிந்து கொண்டு "ஓஹோ! வயதான உன்னை உன் மகனும் மருமகளும் சேர்ந்து இப்படியா கொடுமைப் படுத்தினார்கள்? அவர்களை சபித்துச் சாம்பலாக்கி விடுகிறேன் பார்" என்று கூறிக் கமண்டலத்திலுள்ள நீரை எடுக்கப் போனார்.

அப்போது கிழவி "வேண்டாம். வேண்டாம். அவர்களிருவரும் போய் விட்டால் என் பேரனின் கதி என்னவாகும்?" என்று கதறினாள். பார்க்காத பேரன் மீது கிழவி கொண்ட பாசம் கண்டு முனிவர் சிரித்துக் கொண்டே போய் விட்டார்.

இந்தச் செய்தி ஊர் முழுவதும் பரவி விட்டது. பரமனும் பாமாவும் மற்றும் சிலரும் மயானத்திற்கு ஓடி வந்தார்கள். பரமன் "என்னம்மா இது? வா வீட்டிற்கு" என்று அழைத்தான். பாமாவும் இனித் தன் ஆட்டம் முடிந்தது என்று கண்டு கொண்டாள். அவள் தன் மாமியாரின் கால்களில் விழுந்து "தவறு செய்து விட்டேன். மன்னித்து விடுங்கள்' என்று வேண்டினாள்.

கிழவியும் மகிழ்ந்து போய் அவர்களுடன் வீட்டிற்குச் சென்று தன் பேரனை எடுத்துக் கொஞ்சலானாள்.






இராம நாமத்தை உச்சரித்தவாறே அனுமார் கந்தமாதன பர்வதத்தில் தவக் கோலத்தில் இருந்தார். அப்போது பிரம்மா அவர் முன் வந்து "அனுமாரே! கலியுகம் வரப் போகிறது. எனவே நீங்கள் பால் கடலுக்குப் போய் விடுங்கள்" என்றார்.

பால் கடலில் சேஷனின் மீது சயனித்திருந்த மகாவிஷ்ணுவின் அருகே இருந்து தும்புருவும் நாரதரும் இசை மழை பொழிந்து கொண்டிருந்தார்கள். நாரதர் தன்மஹதி வீணையில் கீர்த்தனைகளை பக்தி பாவத்துடன் இசைத்துக் கொண்டிருந்தார். தும்புருவும் பாடி அவ்வப்போது தன் ஹயக்கீரிவ வீணையில் தாளக் கம்பிகளை மீட்டி மிருதங்கம் வாசிப்பது போல நாதம் வரச் செய்தார்.

நாரதரும் தும்புருவும் தாமே சிறந்த பாடகர்கள் என எண்ணி ஒருவர்மீது மற்றவர் பொறாமையும் கொண்டிருந்தார்கள். முதலில் வாய்ச் சண்டை அடுத்து கைகலப்பு என ஏற்பட்டு இருவரும் விஷ்ணுவிடம் "எங்களில் சிறந்தவர் யார் என்று நீங்களே கூறுங்கள்" என்று வேண்டினார்கள்.

விஷ்ணுவும் அவர்களது சண்டையை நிறுத்த "உங்கள் இசை கேட்டுப் பரவசமாகி நான் தூங்கிப் போய் விட்டேன். அதனால் உங்களில் யார் மேலானவர் என்பதை என்னால் சரியாகக் கூற முடியாது.



கந்தமாதன பர்வதத்தில் ஒரு குரங்கு இருக்கிறது. இராமர் அழைத்து வரச் சொன்னதாகச் சொல்லி அதை இங்கே கூட்டி வாருங்கள். அதன் முன் நீங்கள் இசைப் போட்டி நடத்துங்கள். அது உங்களில் யார் திறமைமிக்கவர் என்று தீர்ப்பு அளித்து விடும்" என்றார்.

தும்புருவும் நாரதரும் போட்டி போட்டுக்கொண்டு ஓடி கந்தமாதன பர்வதத்தை அடைந்தார்கள். அப்போது அனுமார் ஜெபித்துக் கொண்டிருந்த இராமநாமம் ஓங்கார நாதம் போல் அவர்களது காதுகளில் ரீங்காரம் செய்தது. இருவரும் அனுமாரின் அருகே போய் நின்றார்கள்.

அப்போது அனுமார் உச்சரித்த ராமநாமத்தில் ஸ்வர வரிசைகளும் பல ராகங்களும் வெளிப்படுவதை அவர்கள் கேட்டார்கள். ராகத்தோடு பாவமும் கலந்திருந்தது. ராமா என்ற இரண்டு எழுத்துக்களைக் கொண்டு அவர் பல தாளங்களில் ராகங்களைக் கையாண்டது அவர்களை வியக்கச் செய்தது. அவர்கள் தாம் வந்த வேலையை மறந்து அதைக் கேட்டவாறே பிரமித்துப் போய் நின்று கொண்டிருந்தார்கள்!

அனுமார் சிறந்த நாதோபாசகர் என்பது அவர்களுக்குத் தெரிந்தது. சாகித்தியத்திற்கும் சாஸ்திரியத்திற்கும் முக்கியத்துவம் கெடாமல் தன் இனிய குரலால் அவர் கவர்ந்து இழுத்தது அவர்களை மெய்சிலிர்க்கச் செய்தது. அவர்களும் அனுமாரோடு சேர்ந்து இராம நாமத்தை ஜெபிக்கலானார்கள். அனுமாரின் கம்பீரக் குரலோடு அவர்களது குரல்கள் இழைய முடியவில்லை. அதனால் சுருதி சேராமல் அவர்கள் பாடுவது போல இருந்தது.

திடீரென இரு குரல்கள் ஒலிப்பது கேட்டு அனுமார் கண் திறந்து பார்த்தார். தம் எதிரே தும்புருவும் நாரதரும் கண்களை மூடிக் கொண்டு இராம நாமம் ஜெபித்துக் கொண்டிருப்பதை அவர் கண்டார். உடனே அவர் எழுந்து அவர்களது கால்களைத் தொட்டுத் தம் கண்களில் ஒத்திக் கொண்டார்.

அனுமாரின் கரங்கள் தம் கால்களைத் தொட்டதும் தும்புருவும்

நாரதரும் துள்ளி எழுந்தார்கள். அவர்கள் "ஐயா! பெரியவரே! நீங்கள் எங்கள் கால்களில் விழுவதா? எங் களை யாரென்று நினைத்து விட்டீர் கள்? நாங்கள் தும்புருவும் நாரதரும் ஆவோம்" என்றனர்.

அனுமாரும் "நீங்கள் யாராக இருந்தாலும் இராம நாமத்தை உச் சரித்ததால் உங்களை வணங்கினேன். இப்படிச் செய்பவர்களைக் கண்டால் மகிழ்ந்து மரியாதைக் காட்டுகிறேன்" என்றார். அது கேட்டு ஆச்சரியப் பட்டு தும்புருவும் நாரதரும் ஒருவரை மற்றவர் பார்த்துக் கொண்டார்கள்.

அவர்களுக்கு அப்போது தாம் வந்த வேலை பற்றிய நினைவு வந் தது. அவர்கள் அனுமாரிடம் "ஐயா! தங்களை அழைத்து வரும்படி இரா மர் எங்களை அனுப்பினார். அவர் பால் கடலில் சேஷசயனத்தில் படுத் திருக்கிறார்" என்றார்கள்.

நாரதரும் "சீதாதேவி அங்கு அவரது கால்களைப் பிடித்து விட் டுக் கொண்டிருக்கிறாள். இலட்சு மணன் தன் ஆயிரம் தலைகளை விரித்துக் குடையாக்கி நிற்கிறான். பரதனும் சத்ருக்கனனும் அவரது சங்கு, சக்கரங்களாக அவரது திருக் கரங்களில் விளங்குகிறார்கள்" என்று வர்ணித்தார்.

அதுகேட்டு அனுமார் உடனேயே அவர்களோடு கிளம்பிச் சென்றார். கருடன் அவர்களை வரவேற்றான். அனுமாரின் தோள் மீது கை போட்டு அவரையும் மற்றவர்களையும் அழைத்துக் கொண்டு உள்ளே





சென்றான். எல்லோரும் விஷ்ணுவின் அருகே போய் நின்றார்கள்.

அனுமாருக்கு மகாவிஷ்ணு இராமராகவே தென்பட்டார். விஷ்ணுவே இராமர், இராமரே விஷ்ணுவின் அவதாரம் என்று அனுமார் அறிந்து கொண்டு பயபக்தியுடன் அவரை வணங்கினார்.

விஷ்ணுவும் அனுமாரிடம் "அனுமானே! இந்தத் தும்புருவும் நாரதரும் பாடுவதில் யார் மேலானவர் என்று என்னைக் கேட்டார்கள். என்னால் கூறமுடியவில்லை. நீ இவர்களைப் பரீட்சித்து விட்டு முடிவைக் கூறு. இதற்காகத்தான் உன்னை அழைத்து வரும்படி இவர்களிடம் கூறினேன்" என்றார்.

அனுமாரும் "ராமா! ராமா! இதென்ன வேடிக்கை. சங்கீதப் பரீட்சைக்கு நான் நடுவரா? எனக்கு இராம நாமம் உச்சரிக்கத்தானே தெரியும். பாடத் தெரியாதே. என்னால் தாங்கள் செய்யச் சொல்லும் பணியை எப்படி செய்து முடிக்க முடியும்?" என்றார்.

விஷ்ணுவும் "அனுமானே! உன் விவகாரம் எப்போதும் இப்படித்தான். உன் சக்தி உனக்கு தெரியாது. அதுபற்றி வேறு யாராவது ஒருவர் உனக்கு எடுத்துக் கூற வேண்டும். அப்போதுதான் நீ அச்சக்தி உனக்கு இருப்பதை உணர்ந்து செயல்படுவாய். நீ சூரியதேவனிடம் எல்லாக் கலைகளையும் சாஸ்திரங்களையும் கற்றவன். நான் சொல்கிறேன். உனக்கு மிக மிக நன்றாகப் பாட வரும். அதனால் முதலில் நீ பாடு பார்க்கலாம்" என்றார்.

அப்போது அனுமார் மந்தரஸ் தாயியில் 'ஆ'வென இசைக்க ஆரம்பித்தார். அவரது கண்டத்திலிருந்து கம்பீரமாக கல்யாணி ராகம் கணீரென ஒலிக்கலாயிற்று. நாரதர் அது கேட்டு பிரமித்து நின்றார். ராம நாமம்தான் அந்த ராகத்தில் எப்படி மிளர்ந்தது! எவ்வளவு தாளங்களில் அனுமார் மாற்றி மாற்றி ராகமாலிகையாகக் கொண்டு போனார்.

அதைக் கேட்டு பால்கடலில் அலைகள் ஒன்றன் மீது ஒன்று விழுந்து முன் வந்தன. தும்புருவும்

நாரதரும் பக்திப் பரவசமாகி மெய் மறந்து போனார்கள். அனுமார் மேல் ஸ்தாயிக்குப் போனபோது பால் கட லில் அலைகள் பொங்கி எழுந்தன. சேஷ நாகத்தின் ஆயிரம் தலைகளும் படம் விரித்து ஆடின. அனுமார் சட்டென மேல் ஸ்தாயிலிருந்து மந்தர ஸ்தாயிக்கு வந்து வேறு ராகத்தை ஆலாபனை செய்யலானார்.

அப்போது பால் கடலின் அலை கள் மெதுவாக அடங்கத் தொடங் கின. நாரதரின் வீணையும் தும்புரு வின் வீணையும் அலை கடலில் அடித்துக் கொண்டு போகப்பட்டன. அனுமாரின் இசையில் பால் கடல் உறைந்து போக அதில் அவர்களது இரு வீணைகளும் சிக்கிக் கொண் டன.

விஷ்ணு சைகை செய்யவே அனு மார் தாம் பாடுவதை நிறுத்தினார். நாரதரும் தும்புருவும் சட்டென சங் கீதம் நின்றதால் திடுக்கிட்டுப் பார்த் தார்கள். அப்போதுதான் அவர்கள் தம் வீணைகள் உறைந்து போன பால்கடலில் இருப்பதைக் கண்டார் கள். அப்போது விஷ்ணு அவர்களிடம் "நீங்கள் இசைபாடி உங்கள் வீணை களை எடுத்துக் கொள்ளுங்கள்" என்றார்.

நாரதரும் தும்புருவும் பாடினார் கள். ஆனால் உறைந்து போன பால்கடல் உருகி முன்போலாகி விடவில்லை. அவர்களுக்கு தம் வீணைகளை அக் கடலிலிருந்து எடுக்க என்ன செய்வது என்று தெரியவில்லை. அவமானத்தால்





தலைகுனிந்து கொண்டு நின்றார்கள்.

அப்போது விஷ்ணு அனுமாரைப் பார்க்கவே அவரும் பாடலானார். பல ராகங்களில் கீர்த்தனைகள் வெளிப்பட்டன. உறைந்த பால் கடலும் உருகியது. நாரதரின் வீணையும் தும்புருவின் வீணையும் அலைகளால் கரை சேர்க்கப்பட்டன. அனுமாரின் இசை கேட்டு கைலாசத்திலிருந்து பரமசிவனே தம் உடுக்கை நாதத்துடன் தாண்டவம் புரிந்தவாறே அங்கு வந்தார். அவர் பின்னால் பார்வதி, விநாயகர், சிவ கணங்கள் ஆகியோர் வந்தனர்.

பிரம்ம தேவர் தம் கமலாசனத்திலிருந்து இறங்கி வந்தார். அவரோடு சரஸ்வதி தேவியும் வீணை வாசித்துக் கொண்டே வந்தாள். இந்திரன் முதலிய தேவர்களும் வந்தனர். அந்த இடம் ஒரு பெரிய கல்யாணக் கூடம் போலாகி விட்டது. சீதைக்கும் இராமருக்கும் விவாகம் நடந்த போது இப்படித்தான் கூட்டம் இருந்திருக்கும் என்று அனுமார் எண்ணினார்.

நாரதரும் தும்புருவும் தம் வீணைகளை எடுத்துக் கொண்டார்கள். அப்போது சரஸ்வதி தேவி "அனுமார் பாடியவை அனுமகானம் என்ற பெயரில் வழங்கட்டும். இவை பண்டிதர்களையும் பாமரர்களையும் ஒன்று போலக் கவர்பவை. இதயத்தை இவை தொட்டு விடுகின்றன. இது தான் உண்மையான சங்கீதம். நாரத கானத்தில் பாவம் ததும்பும். தும்புருவின் இசையில் தாளம் பிரதானம். பாவம், ராகம், தாளம் மூன்றை தக்க அளவில் கொண்டதே சங்கீதம். அனுமகானம் எளிதில் யாவராலும் பாடக் கூடியது" எனக் கூறினாள்.

அப்போது பிரம்மா அனுமாரிடம் "அனுமானே! உங்கள் தவம் எந்தக் குறிப்பிட்ட நோக்கம் கொண்டும் செய்யப்படாது போயினும் அதன் மதிப்பு மிக அதிகம். அதற்கு பிரம்மாவின் பதவியை அளித்தாலும் தகும். நீ பிரம்மாவாக ஆகப் போகிறாய். ராமநாமத்தை உச்சரித்தவாறே நீ செய்த அந்த தவத்தின் பயனாகத் தான் அப்பதவி உனக்கு கிடைக்க இருக்கிறது. வரப்போகும் கல்பத்தில்

உன் படைப்புகள் மிளிரப் போகின்றன" என்று கூறினார்.

அப்போது சிவபிரானும் "அனுமானே! இந்த பிரம்மதேவனின் படைப்பில் நல்லவர்களை விடக் கெட்டவர்களே அதிகமாக இருக்கிறார்கள். இருக்கவும் போகிறார்கள். தான் கடவுள் என எண்ணிச் சரியாகப் பிரம்மா படைக்காததால் இந்தக் கோளாறு ஏற்பட்டு விட்டது. நீ ராம பக்தன். எப்போதும் நன்மையையே செய்பவன். ராமரையே நீ நினைத்துக் கொண்டிருப்பதால் உன் படைப்புகள் எல்லாம் இராமரைப் போல நல்லவர்களாக அமையும். சீதையைப் போன்ற நற்குணவதிகள் இருப்பார்கள். இலட்சமணனைப் போன்ற சகோதரர்கள் இருப்பார்கள். நீ அப் பதவி பெறும் வரையில் எங்கும் போகவும் வேண்டாம். இங்கேயே விஷ்ணுவிடம் இரு" என்றார்

பிரம்மாவும் "ஆம். சிவனார் கூறியது சரியே. ஒரு சில நல்லவர்கள் இருந்து விட்டால் பெரும்பாலானவர்களை நல்வழிப்படுத்த முடியும். நீ வரப்போகும் பிரம்ம கல்பத்தில் பிரம்மாவாகி நல்ல படைப்புகளாகச் செய்து வா" என்று கூறி அனுமாரைப் பாராட்டினார்.

எல்லோரும் அனுமாரிடம் எல்லாம் சுபமாக முடிய இன்னிசை பாடும்படி வேண்டினர். அவரும் "நீ நாமரூபமுலகு நித்ய ஜெயமங்களம்" என வழக்கமாகப் பாடும் கீர்த்தனை அடியைப் பாடி இராம நாமத்தின் மகிமை என்றென்றும் வெற்றியையே அளிக்கும் என்பதை பதிய வைத்தார்.

அனுமார் நாரதர், தும்புரு, கருடன் ஆகியோருடன் சேஷசயனத்திலுள்ள மகாவிஷ்ணுவின் சன்னிதானத்தில் அவரையும் லக்ஷ்மி தேவியையும் இராமராகவும் சீதா தேவியாகவும் எண்ணி வழிபட்டு வரலானார். அனுமார் அழிவற்றவர்.

(முடிவுற்றது)







# சண்டைக்குப் பரிசு!

ஆத்தூரில் ஆதிமூலத்திற்கும் அன்னம்மாளுக்கும் கல்யாணம் நடந்த போது எல்லோரும் "ஆகா! என்ன பொருத்தமான ஜோடி" என்று பாராட்டினார்கள். ஆனால் ஒரு வருடத்திற்குள் அந்த பொருத்தமான ஜோடி எலியும் பூனையுமாக ஆகிவிட்டது.

ஆதிமூலம் சொல்வதற்கு நேர் எதிராகத்தான் அன்னம் செய்வாள். இருவரும் ஒற்றுமையாக ஒருகணம் இருந்தது கூட இல்லை. எதிலும் ஏட்டிக்கு போட்டி தான்! அற்ப விஷயத்திற்குக் கூட ஒரு சண்டை.

இவர்கள் இப்படி தினமும் சண்டை போடுவதை ஊரார் வெகுவாக ரசித்தார்கள. ஆரம்பத்தில் அன்னியோன்னியமாக இருந்த அவர்கள் ஒருசில நாட்களிலேயே எதற்கும் வாக்குவாதம் செய்தது கண்டு எல்லோரும் ஆச்சரியப்பட்டார்கள்.

ஒரு நாளிரவு தூங்கும் போது பூனைக்குட்டி கத்துவது கேட்டு ஆதிமூலம் "ஏய் அன்னம்! என்ன கும்பகர்ணன் மாதிரி தூங்குகிறாய்? ஒரு பூனைக் குட்டி சன்னல் வழியாக உள்ளே வந்திருக்கிறது. எழுந்து போய் அதை விரட்டு" என்று கூறித் தன் மனைவியை எழுப்பினான்.

அன்னமோ "இதற்கு என்னை எழுப்புவானேன்? நீங்களே போய்த் துரத்தி விட்டு வருவதுதானே" என்று கூறிப் போர்வையை இழுத்துப் போர்த்திக் கொண்டாள். இனி அவனிடம் பேசிப் பயனில்லை என்று எண்ணி ஆதிமூலம் படுக்கையிலிருந்து எழுந்து பூனைக் குட்டியைத் துரத்திக் கொண்டு வாசல் கதவு வரை சென்றான்.

அவன் வாசல் கதவைத் திறந்து பூனைக் குட்டியைத் வெளியே துரத்தி விட்டு நிமிர்ந்த போது இரண்டு திருடர்கள் கத்தியைக் காட்டி மிரட்டி

- ரம்யா குருமூர்த்தி -



ஆச்சரிப்பட்டார்கள். ஒரு கணவன் தன் மனைவியைக் காட்டிக் கொடுக்கிறான் என்றால் அவர்களுக்குள் ஏட்டாபோட்டி இருப்பதாகத் தானே பொருள்! அதை நன்கு பயன்படுத்திக் கொள்ள அவர்கள் எண்ணினார்கள்.

அப்போது கருப்புத் திருடன் "அவளை கட்ட கயிறு வேண்டாம். என் கண்களை உருட்டி பார்த்தாலே அவள் பயந்து விட மாட்டாளா?" என்றான் பயங்கரமாகச் சிரித்துக் கொண்டே. அப்போது வெள்ளைத் திருடன் வாசல் கதவைத் தாளிட்டு வந்தான்.

பேச்சுக் குரல் கேட்டு அன்னம் மெதுவாக எழுந்தாள். அதற்குள் கருப்புத் திருடன் கத்தியை அவள் கழுத்தில் வைத்து "நட. உன் புருஷன் கதியைப் பார்" என்று அழைத்து வந்தான். உடனே அவள் "ஆகா! நல்ல வேலை செய்தீர்கள். ரொம்ப நாளாக இவரை இப்படித்தான் தூணோடு கட்டிப் போட வேண்டும் என நினைத்தேன். நீங்கள் அதைச் செய்து விட்டீர்கள்" என்று கூறிக் கை தட்டிச் சிரித்தாள்.

அதைக் கேட்டு திருடர்கள் ஆச்சரியப்பட்டார்கள். அந்தக் கணவன் மனைவி இருவருக்கும் ஒருவருக்கு மற்றவர் பிடிக்காது என்பது உறுதியாக விட்டது. கருப்புத் திருடன் அவளிடம் "சும்மா கத்தாதே. மரியாதையாக இருக்கும் நகை, பணம் எல்லாம் கொடுத்து விடு" என்றான்.

அவனை வீட்டிற்குள் தள்ளி தாமும் உள்ளே நுழைந்தவாறே "நாங்கள் சன்னல் வழியாகவிட்ட பூனைக்குட்டியைத் துரத்திக் கொண்டு வெளியே வருவாய் என்று எங்களுக்குத் தெரியும்" என்றார்கள்.

ஆதிமூலம் திகைத்துப் போனான். என்ன செய்வது என யோசிக்கையில் அவர்கள் ஒரு தாம்புக் கயிறை எடுத்து அவனை ஒரு கம்பத்தோடு கட்டினார்கள். அப்போது அவன் "என் ஒருவனைக் கட்ட இதைச் சுற்றி விட்டீர்களே. அந்த அறையில் படுத்திருக்கும் என் மனைவியை எதைக் கொண்டு கட்டிப் போடப் போகிறீர்களாம்?" என்று கேட்டான்.

அதைக் கேட்ட இரு திருடர்களும்

ஆதிமூலம் புன்னகை புரிந்தான். அன்னம் சரியாக மாட்டிக் கொண் டாளே என்பது அவன் சொல்லாமல் சொல்வது போல இருந்தது. அது கண்டு திருடர்கள் மகிழ்ந்து போனார்கள்.

அவளோ "இந்த வீட்டில் தங்க நகையும் வெள்ளிப் பாத்திரமுமா என் கணவர் வாங்கி வைத்திருக் கிறார்? இருப்பது நாலு தகர டப்பாக் களும் இரண்டு அலுமினிய பாத்திரங் களுமே. நேற்றுத்தான் சம்பளம் வாங்கித் தன் தலையணைக்குக் கீழ் வைத்திருந்தார். அவரது சம்பளம் என்ன என்று கூட எனக்குத் தெரி யாது. நீங்கள் அதை எடுத்து எண் ணிப் பார்த்து எனக்கும் சொல்லுங் கள்" என்றாள்.

அப்போது ஆதிமூலம் "என் சம் பளம் பணத்தை எடுத்துக் கொள்ள இவர்களிடம் சொல்கிறாயா? அப்படி யென்றால் இந்த மாதம் முழுவதும் பட்டினி கிடப்பதுதான் உன் உத்தே சமா?" என்று தன் மனைவியைப் பார்த்துக் கேட்டான். அவளோ "நான் ஏன் பட்டினி கிடப்பேன்? தலை விதியா? உங்களை இங்கேயே விட்டு விட்டு என் பிறந்த வீட்டிற்குப் போய் விடுவேன்" என்றாள் கொக் கரித்துக் கொண்டே.

கருப்புத் திருடன் ஆதிமூலத்தின் படுக்கைத் தலையணையின் கீழிருந்த பணத்தை எடுத்துக் கொண்டு அன்னத்திடம் "இப்போது இதை



எண்ணிக் கொண்டிருக்க நேர மில்லை. இன்னொரு தடவை நாலைந்து நாட்களுக்குப்பின் வரு வோம். அப்போது இதில் எவ்வளவு இருந்தது என்று சொல்கிறேன்" என்று கூறிப் பணத்தை இடுப்பில் சொருகிக் கொண்டான்.

அன்னமும் "ஆகா! அப்படியே செய்யுங்கள். நாலைந்து நாட்கள் கழித்து வரமுடியாவிட்டாலும் பத்து நாள் கழித்து வந்து கூடச் சொல்ல லாம். அவசரமில்லை. உங்கள் கை விரலுக்கு மோதிரம் அழகாக இருக் குமே. என் கணவர் போட்டிருக்கும் மோதிரத்தை எடுத்துக் கொள்ளுங் கள். இது என் அப்பா அவருக்குக் கொடுத்தது. எப்போதும் என் வீட்டா



ரைக் கரித்துக் கொட்டும் இவருக்கு அவர் கொடுத்த மோதிரம் எதற்கு?" என்றாள்.

இதைக் கேட்ட கருப்புத் திருடன் ஆதிமூலத்தின் விரலிலிருந்த மோதிரத்தைக் கழற்றி எடுத்துக் கொண்டான். அப்போது ஆதிமூலம் "ஐயா வெள்ளைத் திருடரே! இவள் தன் நகைகளையெல்லாம் ஒரு பெட்டியில் போட்டு இவ்வீட்டுக் கிணற்றிற்குள் போட்டு வைத்திருக்கிறாள். கிணற்றில் இறங்கி எடுத்துக் கொள்ளுங்கள்" என்றான்.

அப்போது அன்னம் "என் நகைகள் இருக்கும் இடத்தைச் சொல்லிப் பழியா வாங்குகிறீர்கள்?" என்று பொருமினாள். வெள்ளைத் திருடனோ "சரி, சரி, நட கிணற்றிற்கு" என்றான். அப்போது அன்னம் "நாம் போனதும் இவர் பலமாகக் கத்தி ஊரைக் கூட்டி விடுவார். அதனால் இவரது வாயில் துணிப் பந்தை அடைத்து விட்டு வாருங்கள்" என்றாள். கருப்புத் திருடன் உடனே ஆதிமூலத்தின் வாயில் துணியைத் திணித்தான். இரு திருடர்களும் அன்னம் வழிகாட்ட கிணற்றை அடைந்தார்கள்.

வெள்ளைத் திருடன் கிணற்றில் தொங்கிய தாம்புக் கயிறை எடுத்து ஒரு மரமுளையில் கட்டி மறுமுனையைக் கிணற்றுள் விட்டு அக்கயிறை பிடித்துக் கொண்டு கிணற்றுள் இறங்கினான். அப்போது அன்னம் கண்ணீர் வடித்தவாறே "என் நகைகள் போகட்டும் என்றா என் கணவர் நினைத்தார்? நானும் அவரது அம்மா காசிக்குப் போகுமுன் தம் நகைகளை வீட்டு பரண் மீது ஒரு ஓலைப் பெட்டியில் வைத்திருப்பதைச் சொல்கிறேன். நீங்கள் என் கணவரின் அறைக்குப் போய் பரண் மீது ஏறி அந்தப் பெட்டியை எடுத்துக் கொள்ளுங்கள்" என்றாள். கருப்புத் திருடன் வீட்டிற்குள் சென்றான். அந்த அறையைக் காட்டுவதற்காக அன்னமும் அவன் கூடவே சென்றாள்.

திருடர்களுக்கு ஒரே மகிழ்ச்சி. கணவன் மனைவியரின் சண்டையால் தங்களுக்கு இருவகை வருமானம் என்று இரு திருடர்களும் எண்ணி

னார்கள். அதனால் தான் அவர்களுக்கு அன்னம் சொன்னதில் முழு நம்பிக்கை ஏற்பட்டுவிட்டது.

கருப்புத் திருடன் அந்த அறைக்குள் போனதும் அன்னம் சட்டென அந்த அறைக் கதவை மூடி வெளியே பூட்டி விட்டாள். பிறகு தன் கணவனின் கட்டுகளை அவிழ்த்து விட்டாள். இதற்குள் விடிந்தும் விட்டது. அப்போது அன்னம் "இரண்டு திருடர்களும் அகப்பட்டார்கள். ஒருவன் இங்கே அறையில் அடைபட்டுக் கிடக்கிறான். இன்னொருவன் கிணற்றுள் இருக்கிறான். அவன் மேலே வரமுடியாதபடி கயிற்றை முளையிலிருந்து அவிழ்த்து விட்டேன்" என்றாள்.

ஆதிமூலம் "பேஷ். நம் சாதாரணப் போட்டாபோட்டி எவ்வளவு உபயோகமாக இருந்தது பார்த்தாயா? அதற்காகத்தான் முதலில் நான் ஆரம்பித்தேன். நீயும் புரிந்து கொண்டு விட்டாய். இல்லாத நகைப் பெட்டிகளை இருப்பதாகக் கூறி அவர்களை நம்பவைத்துப் பிடித்து விட்டோம். இனி காவலாளியிடம் சொல்லி அரசாங்கத்திடம் அவர்களை ஒப்படைப்போம்" என்றான்.

காலையானதும் காவல் வீரர்கள் வந்து இரண்டு திருடர்களையும் பிடித்துக் கொண்டு போனார்கள். அவர்கள் பெயர் பெற்ற திருடர்கள். பல திருட்டுகளை நடத்தியவர்கள். அவர்களை பிடித்துக் கொடுப்பவர்களுக்கு பரிசு கூட அளிப்பதாக அரசாங்கம் அறிவித்திருந்தது.

ஆதிமூலம் பரிசு தனக்கே என்றான். அன்னமோ "அதெல்லாம் இல்லை. நான்தான் அவர்களைப் பிடித்தேன். எனவே எனக்குத்தான் பரிசு கிடைக்க வேண்டும்" என்றாள்.

கிராம அதிகாரியோ "நீங்கள் இருவரும் சண்டை போட்டுக் கொண்டே திருடர்களைப் பிடித்துக் கொடுத்தீர்கள். கிடைக்கப் போகும் பரிசிற்காக சண்டை போடாமல் இருங்களேன்" என்றான்.

அங்கு கூடிய ஊராரும் "நன்றாகச் சொன்னீர்கள்" என்று கூறிக் கை தட்டிச் சிரித்தனர்.





# இசையும் உணவும்

கோபாலனுக்கு சங்கீதம் மிகவும் பிடிக்கும். அதனால் அவன் பாடுவதோடு தன் பாட்டைப் பிறரும் கேட்க வேண்டும் என்று விரும்பினான். ஆனால் அவன் பாட்டு என்றாலே பெரியோர் முதல் சிறியோர் வரை அலறியடித்துக் கொண்டு ஓடி விடுவார்கள். ஏனெனில் அதைக் கேட்கச் சகிக்க முடியாது.

அவனது பாட்டி நன்கு பாடக் கூடியவள். அவளிடம் அவன் போய் "பாட்டீ! எனக்கு உன் சங்கீதம் கற்றுக் கொடு" என்றான். அதற்கு அவள் "ஏன்? நீதான் பாடிக் கொண்டிருக்கிறாயே" என்றாள். அவனும் "நான் பாடினால் மட்டும் போதாது. பிறரும் அதைக் கேட்டு ரசிக்க வேண்டும்" என்றான்.

பாட்டியும் "ஆரம்ப காலத்தில் நானும் உன்னைப் போலத்தான் தவித்தேன். நாளாக ஆக எல்லோரும் முணுமுணுக்காமல் கேட்கலானார்கள். நீயும் என் வயதிற்கு வந்தால் உன் பாட்டை எல்லோரும் கேட்பார்கள்" என்றாள்.

கோபாலனும் "சரி. நீ பாடுவதைப் போல எனக்கும் கற்றுக் கொடு" என கேட்டான். அவள் "எனக்கு பாடத்தான் தெரியும். சொல்லிக் கொடுக்கத் தெரியாதே. சமையல் வேண்டுமானால் கற்றுக் கொடுக்கிறேன்" என்றாள்.

கோபாலனோ "என்ன பாட்டீ! சங்கீதம் கற்றுக் கொடு என்றால் சமையல் கற்றுக் கொடுக்கிறேன் என்கிறாயே" என்றான். அவளும் "உன் சமையலை ருசித்துச் சாப்பிட யாராவது வருவான். அப்போது அவனுக்கு பாடிக் காட்டலாம்" என்றாள்.

கோபாலனும் "இதற்கு நான்

- க. வெங்கடாசலம் -

சமைப்பானேன்? ஒரு நல்ல சமையல்காரரை வைத்து சமைத்துப் போட்டால் போயிற்று" என்றான். பாட்டியோ "அவனுக்குப் பணம் கொடுக்க வேண்டும். அப்படியும் அவன் சமையலை ரசிப்பவர்கள் இருந்து உன் பாட்டை கேட்டு சாப்பிட்டா போவார்கள்" என்றாள். அவனும் பாட்டி சொன்னாளே என்று சமையல் கற்றுக் கொள்ளலானான். பதினாறு வயதிலேயே சமையல் கலையில் தேர்ந்து விட்டான்.



அவன் பாட்டியிடம் "இனிமேலாவது எல்லோரையும் கூப்பிட்டு சாப்பாடு போட்டு அவர்களுக்கு பாடிக் காண்பிக்கட்டுமா?" என்று கேட்டான். பாட்டியும் "நீ மட்டும் அப்படிச் செய்தால் உன் அப்பா உன்னையும் என்னையும் இந்த வீட்டை விட்டே துரத்தி விடுவார். இதற்காக நீயாகச் சம்பாதித்து செலவு செய்ய வேண்டும். நீ தின்பண்டங்கள் செய்து விற்றால் பணம் கிடைக்கும்" என்றாள்.

கோபாலனும் "நான் சமையல் கற்றுக் கொண்டது வியாபாரத்திற்காக அல்லவே. என் பாட்டைப் பிறர் கேட்க வேண்டும் என்பதற்காகத்தானே" என்றான். பாட்டியும் "இதற்காகத்தான் நீ தின்பண்டங்கள் செய்து விற்றால் உன் பாட்டைக் கேட்பார்கள்" என்றாள். அவனும் அதன்படி செய்யவே நல்ல லாபம் கிடைத்தது. அவன் உள்ளூரிலேயே ஒரு பட்சணக் கடை வைத்து நடத்தலானான்.

தினமும் கோபாலன் வந்தவர்களை வீட்டிற்கு அழைத்துப் போய் பாடிக் காட்டலானான். ஆரம்பத்தில் வந்த கூட்டம் நாளுக்கு நாள் குறையலாயிற்று. பிறகு தினம் ஒருவன்தான் அவன் பாட்டைக் கேட்க வரலானான். அவன் பாட்டைக் கேட்பதை விட அவன் விற்கும் தின்பண்டங்களையே எல்லோரும் விரும்பினார்கள்.

இதனால் உற்சாகமிழந்து பாட்டியிடம் அவன் யோசனை கேட்க அவளும் "நீ தினமும் பாடாதே. வாரத்திற்கு ஒருமுறை பாடு. அதுவும் பஜனை என்று கூறி கூட்டம் கூட்டு" என்றாள். கோபாலனும்



பஜனைக்கு ஏற்பாடு செய்தான். ஆனால் அது முடியும் போது எல்லோரும் சுண்டல் வாங்கிக் கொண்டு "ஆகா! பிரசாதம் வெகு ஜோர்" என்று சொல்லிக் கொண்டே போனார்கள்.

கோபாலன் சோர்ந்து போனான். அப்போது பாட்டி "உன் கையில் நல்ல வித்தை இருக்கிறது. நீ பட்டணத்திற்குப் போய் பட்சணக் கடையை ஆரம்பி. அங்கு உனக்கு நிறையப் பணமும் கிடைக்கும். உன் பாட்டைக் கேட்க ரசிகர்களும் கிடைப்பார்கள்" என்றாள்.

கோபாலனும் பட்டணத்திற்குப் போய் பட்சணக் கடையைத் திறந்தான். அங்கும் ஆரம்பத்தில் கூட்டம் அதிகம் வந்தது. பிறகு குறைந்தது. காரணம் அவன் பாடிக் காட்ட முயன்றதுதான். முடிவில் அங்கு கூட ஒரு நாளுக்கு ஒருவன்தான் அவன் பாட்டைக் கேட்க வரலானான்.

மத்தியான வேளையின் போது கோபாலனுக்கு கடையில் அதிக விற்பனை இருக்கவில்லை. ஒரே ஒரு பிச்சைக்காரன் மட்டும் தினமும் பட்சணக் கடை முன் நின்று தின்பண்டங்களை ஏக்கத்துடன் பார்க்கலானான்.

ஒருநாள் கோபாலன் அந்த பிச்சைக்காரனைக் கூப்பிட்டு "உனக்கு வயிறு நிறையச் சாப்பாடு போடுகிறேன். நீ முதலில் என் பாட்டைக் கேட்கிறாயா?" என்று கேட்டான். அவனும் அதற்கு இணங்கினான். கோபாலன் முதலில் தனக்குப் பிடித்தமான பாட்டைப் பாடி அவனைக் கேட்கச் செய்து விட்டுப் பிறகு சாப்பாடு போட்டான். அவன் திருப்தியாகச் சாப்பிட்டு விட்டுப் போனான்.

மறுநாள் தினமும் வந்து நின்ற பிச்சைக்காரன் வரவில்லை. வேறொரு பிச்சைக்காரன்தான் வந்தான். கோபாலன் பழைய பிச்சைக்காரன் வருவானா என்று பார்த்து நிற்கவே புதிய பிச்சைக்காரன் அவனை அணுகி "நீங்கள் அளிக்கும் உணவு மிக நன்றாக இருக்கிறது என்று கூறி என் பிச்சைக்கார

நண்பன்தான் இங்கு அனுப்பினான். நான் உங்கள் பாட்டைக் கேட்டு விட்டு சாப்பிட்டு விட்டுப் போகி றேன்" என்றான்.

அதுகேட்டு கோபாலன் "அது சரி, அந்தப் பிச்சைக்காரன் இன்று ஏன் வரவில்லை?" என்று கேட்டான். பிச்சைக்காரனும் "என் பிச்சைக்கார நண்பனுக்கு சங்கீத ஞானம் அதிகம். அதனால்தான் தாங்கள் பாடுவதைக் கேட்கத் தயங்குகிறான். எனக்கு சங் கீதம் பற்றி எதுவும் தெரியாது. அத னால்தான் தயங்காமல் சாப்பிட வந் தேன்" என்றான்.

அதைக் கேட்டுக் கொண்டே அங்கு வந்த சரஸ்வதி என்ற பெண் 'களுக்' கென்று சிரித்தாள். அது கண்டு முகம் சிணுங்கி கோபாலன் "ஏன் சிரிக்கிறாய்?" என்று கேட்டான். அவளும் "எனக்கு சமையல் கற்க எரிச்சல். ஆனால் பெண்ணாக பிறந்த நான் சமையல் கற்றுக் கொள்ள வேண்டும் என்று என் தந்தை வற்புறுத்துகிறார். உங் களைப் போல யாராவது எனக்கு சாப்பாடு போடுவதானால் நான் எவ்வளவு பாட்டுகள் வேண்டுமானா லும் எவ்வளவு நாட்களுக்கும் கேட் கத் தயார்" என்றாள்.

அப்போது அங்கிருந்த பிச்சைக் காரன் "உனக்கு இசை ஞானம் இல்லையா?" என்று அவளைப் பார்த்து ஆச்சரியத்தோடு கேட்டான். அவளும் "ஏன் இல்லாமல்? என்



தந்தை பிரபல சங்கீத வித்வான். அவர் பாட்டைக் கேட்க தினமும் பலர் வருகிறார்கள். வருபவர்களுக்கு சாப்பிட எதுவும் கொடுக்க முடிய வில்லையே என்று என் தந்தை வருந்துகிறார். என் சமையல் நன் றாக இராது. இதனால் தினமும் என் வீட்டில் சண்டைதான்" என் றாள்.

கோபாலனும் "அப்படியானால் நீ கண்டிப்பாக என் பாட்டைக் கேட் கத்தான் மாட்டாய்" என்றான். அவளோ "அதெல்லாம் இல்லை சமையல் செய்வதிலிருந்து தப்ப நான் எதையும் செய்யத் தயார். உன் பாட்டையும் சகித்துக் கொள்வேன். இதில் ஒரு சிரமமும் எனக்கு

இல்லை. எனக்கு இஷ்டமில்லாத வேலையை நான் செய்ய மாட்டேன்" என்றாள்.

கோபாலனும் "உன் தகப்பனார் பாட்டைக் கேட்க வருபவர்களுக்கு சாப்பிட எதையாவது ஏன் கொடுக்க வேண்டும்?" என்று கேட்டான். அவளும் "அவர்கள் விலையுயர்ந்த பரிசுகளை என் தந்தைக்கு அளிக் கும் போது அவர்களுக்கு ஏதாவது கொடுப்பதுதானே மரியாதை" என் றாள்.

அப்போது கோபாலன் தன் ரசிகர்களுக்கும் சரஸ்வதியின் தந்தை யின் ரசிகர்களுக்கும் உள்ள வித்தி யாசத்தை அறிந்தான். அவர்கள் பேசியதை எல்லாம் நின்று கேட்டுக் கொண்டிருந்த அவனது பாட்டி அவர்கள் முன் வந்தாள். கோபா லன் சரஸ்வதிக்கு அவனைத் தன் பாட்டி என அறிமுகம் செய்து வைத்தான்.

அவளும் "இவரைத்தான் நான் ஏற்கனவே பார்த்திருக்கிறேன்" எனக் கூறி அங்கிருந்து போக முயன்ற போது பாட்டி அவளைத் தடுத்து நிறுத்தி "நீ பேசியதை எல்லாம் கேட்டேன். கெட்டிகாரிதான் நீ. உன் தந்தை யார்? அவரிடம் நான் பேச வேண்டும்" என்றாள்.

சரஸ்வதி அவளைத் தன் வீட் டிற்கு அழைத்துச் சென்றாள். பாட்டி தன் பேரனின் கடையில் சற்று முன் நடந்ததை எல்லாம் சொல்லி "சரஸ்வதியை என் பேர னுக்குப் பெண் கேட்க வந்திருக் கிறேன். அவளுக்கு அவன் மீது பிடிப்பு இருப்பதை நான் காண் கிறேன். உங்கள் பெண்ணிற்கு சமையல் செய்யும் சிரமம் இராது. ஏனெனில் என் பேரன் நன்றாகச் சமைப்பான். மேலும் என் பேரனுக் கும் அவனது பாட்டைக் கேட்க ஒரு வர் கிடைத்து விட்டார்" என்றாள்.

சரஸ்வதிக்கும் கோபாலனுக்கும் விரைவில் விவாகம் நடந்தது. அவர்களின் பிரச்னைகளும் தீர்ந்து போயின.



# இயற்கை விநோதங்கள்

## உப்பு பற்றிய உண்மை



கடல் நீர் உப்பாக உள்ளதற்குப் பல கற்பனைக் கதைகள் வழக்கில் உள்ளன. உப்புக் கப்பல்கள் கவிழ்ந்ததால் நீர் உப்பானது எனவும் கூறுவது உண்டு! ஆனால் உண்மைக் காரணம் பல நதிகள் பல மலைகளிலிருந்து கிளம்பி தம்மோடு அங்குள்ள உப்புகளையும் தாதுப் பொருட்களையும் எடுத்து வந்து கடலில் சேர்க்கின்றன. இவை நீரில் கரைந்தும் கடலடியில் தங்கியும் கடல் நீரை உப்பாக்குகின்றன. உப்பளப் பாத்திகளில் கடல் நீரை நிரப்பி சூரிய வெப்பத்தால் ஆவியாக்கி உப்பு தயாரிக்கப்படுவது இதை நிரூபிக்கிறது.

## நீரின்றி வளரும் செடிகள்!



பாலைவனத்தில் சில செடிகள் வளர்கின்றன. இவற்றிற்கு நீர் ஏது? இவற்றின் வேர்கள் பூமிக்குள் ஆழமாகச் செல்லாமல் பரந்து மேலாக இருந்து மழை பெய்தால் அந்நீரை உறிஞ்சி செடியின் கணுக்களில் சேர்த்து வைக்கும். இவ்வாறு சேர்க்கப்பட்ட நீர் செடி வளர உதவும். இச்செடிகள் அநேகமாக முட்செடிகளே. சப்பாத்திக் கள்ளி போல தடிமனாக இருக்கும்.

## இலை தண்டுகள் காம்புகள்



இலைகளின் காம்புகள் பார்க்க அழகாய் இருக்கும். இவைதான் இலைகளின் ரத்தக் குழாய்கள் எனலாம். வேர்கள் பூமியிலிருந்து எடுத்து அனுப்பும் உப்பு, தாதுப் பொருள்களை இந்த இலைக் காம்புகள் போலுள்ள குழாய்கள் பரப்பி இலையின் எல்லாப் பகுதியையும் அடையச் செய்கின்றன. பருத்துக் கிளைகளாகவும் ஆகின்றன. முதல் அடிக்காம்பு பருத்து செடியை நன்கு வளர்க்கிறது. தண்டுக் காம்பும் இருந்து இலைகளையும் பசுமைகளாக ஆக்குகின்றன.

# கேம்ப்கோ விந்தை உ




கேம்ப்கோவின் இணையற்ற இனிமை
மிகப்பெரிய, அதிநவீன ஆலையின்
சுவையோ அருமை! தெவிட்டாத
உல்லாச நேரங்களை உங்க
















கிற்கு வாருங்கள்!

ில் மூழ்கித் திளையுங்கள். இந்தியாவின்
தயாரிப்பு — கேம்ப்கோ சாக்லேட்.
இனிமை! தித்திக்கும் தருணங்களாய்
க்கு அளிக்கிறது கேம்ப்கோ.




இனிமையின் இமயம்.



# போட்டோ வாக்கியப் போட்டி : : பரிசு ரூ.100

**இந்தப் போட்டியின் வெற்றி பெற்ற தலைப்புகள் 1994 ஆகஸ்டு மாத இதழில் வெளியிடப்படும்**


Shanbagavalli


Sundaramurthy

★ தலைப்புகள் ஒரு வார்த்தையிலிருந்து நாலைந்து வார்த்தைகளுள் இருக்கலாம். இரு தலைப்புகளுக்கும் தொடர்பு இருக்க வேண்டும் ★ ஜுன் 10-ம் தேதிக்குள் போட்டிக்கான தலைப்புகள் எமக்கு வந்து சேர வேண்டும்.

★ எம்மிடம் வந்து சேர்ந்த தலைப்புகளில் நாம் சிறந்ததாகக் கருதும் தலைப்புகளுக்கு ரூ.100/- பரிசு. இது இரு தலைப்புகளுக்கும் சேர்ந்ததே. ★ தலைப்புகளை தபால் கார்டில் மட்டுமே எழுதி கீழ்க்கண்ட முகவரிக்கு அனுப்பவும்.

**'அம்புலிமாமா, போட்டோ வாக்கியப் போட்டி' சென்னை - 600 026**

## ஏப்ரல் மாதப் போட்டி முடிவு

| | |
|---|---|
| முதலாவது போட்டோ | : **அனுபவங்களின் இழையோட்டம்** |
| இரண்டாவது போட்டோ | : **ஆசைகளின் அலையாட்டம்** |
| பரிசு பெற்றவர் | : **கே. சாகுல் அமீத், சேந்தமங்கலம்.** |




**Printed by B.V. REDDI at Prasad Process Private Ltd., 188 N.S.K. Salai, Madras 600 026 (India) and Published by B. VISWANATHA REDDI on behalf of CHANDAMAMA PUBLICATIONS, Chandamama Buildings, Vadapalani, Madras 600 026 (India). Controlling Editor: NAGI REDDI.**

